உ

கணபதி துணை.

# பாலபாடம்

## நான்காம்புத்தகம்.

இஃது

அரசினர் நன்கொடை பெறும்

சைவவித்தியாசாலைகளி னுபயோகத்திற்காக

**சுவாமிநாதபண்டிதரால்**

தமது

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

சென்னபட்டணம்:

கீலக ௵ வைகாசி ௴.

இதன்விலை அணா - ௫.



1908.

உ

கணபதிதுணை.

# பாலபாடம்.

## நான்காம்புத்தகம்.



இஃது

அரசினர் நன்கொடை பெறும்

சைவவித்தியாசாலைகளி னுபயோகத்திற்காக

சுவாமிநாதபண்டிதரால்

தமது

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

சென்னபட்டணம்:

கீலக ஸ்ரீ வைகாசி மீ.

இதன் விலை அணா - ௫.



1098.

உ

கணபதி துணை.

# பாலபாடம்.

## நான்காம்புத்தகம்.



### க. ஆரம்பம்.

காரணம் - ஏது.
ஊழ் - பழவினை.
சித்தி - கைகூடுதல், நிறைவேற்றம்.
பிரணவம் - ஓங்காரம்.
விக்கினம் - இடையூறு.
மூர்த்தம் - வடிவம்.

பிள்ளைகளே!

நீங்கள் பாலபாடம் மூன்றாம் புத்தகம் படித்து முடித்து, இப்பொழுது பாலபாடம் நான்காம்புத்தகம் படிக்க ஆரம்பிக்கின்றீர்கள். யாவனொருவன் யாதொரு தொழிலையேனும் செய்யத் தொடங்கும்போது அத் தொடக்கம், ஆரம்பம் என்று சொல்லப்படும். பிள்ளைகள் கல்விகற்கத் தொடங்குவதும் ஆரம்பம். உண்ணத் தொடங்குவதும் ஆரம்பம். பயிரிடுவோர் உழத்தொடங்குவதும் ஆரம்பம். வணிகர் வாணிகஞ் செய்யத் தொடங்குவதும் ஆரம்பம். அரசர் அரசாளத்தொடங்குவதும் ஆரம்பம்.

ஆரம்பம் ஆகிய எத்தொழிலும் முடிவு பெறும் என்பது நிச்சயம். அந்த முடிபு, ஆரம்பித்தவர் எண்ணியபடி முடியினும் முடியும்; முடியாதொழியினும் ஒழியும். எந்தத் தொழிலையும் ஆரம்பிக்கின்றவர்கள் அந்தத் தொழில் தாம் எண்ணியபடி முடியவேண்டும் என்னும் விருப்பம் உடையவர்களாய் இருக்கின்றார்கள். ஆயினும் சிலகாலத்து அவர்கள் எண்ணியபடி முடியாததற்குக் காரணங்கள் உண்டு.

தன்னால் முடியாத ஒரு தொழிலை ஒருவன் ஆரம்பிப்பானேயாயின் அது அவன் எண்ணியபடி முடியமாட்டாது. ஆதலினாலே எந்தத் தொழிலையும் ஆரம்பிக்கின்றவர்கள் ஆரம்பிக்க முன்னரே அது தம்மால் முடியுமோ, முடியாதோ, என்று ஆலோசித்தே ஆரம்பித்தல் வேண்டும். ஆரம்பித்தபின் ஆலோசித்தலாற் பயன் இல்லை. ஆலோசித்தே ஆரம்பித்த தொழில்களும் பின்பு முயற்சியின்மை முதலிய காரணங்களினாலே எண்ணியபடி முடியாமற்போதலும் உண்டு. ஆதலினாலே ஆரம்பித்த தொழிலை எண்ணியபடி முடிக்கவேண்டிய முயற்சி முதலியவைகள் யாவரிடத்தும் இருத்தல் வேண்டும்.

தக்க முயற்சி உடையவர்கள் ஆலோசித்தே ஆரம்பித்த தொழில்களும் சிலகாலத்து அவருடைய பழைய ஊழினாலே எண்ணியபடி முடியாமற்போதலும் உண்டு. ஊழின்வலி கடவுள் வழிபாட்டினாலே நீங்கும் அன்றிப்

பிறிதொன்றால் நீங்காது. ஆனமைபற்றியே எந்தத் தொழிலை ஆரம்பிப்பவர்களும் ஆரம்பித்தற்கு முன் கடவுள் வழிபாடு செய்தே ஆரம்பிக்கின்றனர். நாம் யாதொரு தொழிலையும் ஆரம்பிக்கும்போது வழிபட வேண்டிய கடவுள் சிவபெருமானுடைய மூத்த குமாரராகிய விநாயகக்கடவுளையாம். அவர் சிவபெருமானுடைய மூர்த்தங்களுள் முதன்மூர்த்தமாய் இருத்தலானும், வேதத்தின் முதலாகிய பிரணவவடிவமாய் இருத்தலானும், விக்கினங்களை ஊழின்வழியே ஆக்குபவரும் நீக்குபவருமாய் இருத்தலானும், எந்தத்தொழிலையும் ஆரம்பிக்கும்போது செய்யும் வழிபாடு அவர்க்கு உரியதாயிற்று. ஆதலினாலே, பிள்ளைகளே நீங்கள் இப்பொழுது ஆரம்பிக்கும் இத்தொழில் இடையூறின்றி இனிது முடியும் பொருட்டு அந்த விநாயகப்பெருமானை வழிபட்டே ஆரம்பித்தல் வேண்டும். பின்பு முயற்சியாய்ப் படிப்பீர்களாயின் சித்திபெறுவீர்கள்.

**பரீக்ஷைவினா.** ஆரம்பமாவது யாது? அதனை விளக்குக. ஆரம்பித்த ஒருதொழில் முடிவுபெறாமற் போதலும் உண்டா? எண்ணியபடி முடியாததற்கு இப்பாடத்திற் சொல்லிய காரணங்களை ஒவ்வொன்றாகச் சொல்லி விளக்குக. ஆரம்பிக்கும்போது ஏன் கடவுள் வழிபாடு செய்தல்வேண்டும்? அப்போது நாம் ஆரை வழிபடுதல்வேண்டும்?

---

## உ. வித்தியாசாலை. 1

வித்தியாரம்பம் - வித்தையைக் கற்பிக்கத்தொடங்கல்.
ஆசிரியன் - உபாத்தியாயன்.
அநுட்டித்தல் - செய்தல், கைக்கொண்டு நடத்தல்.
பிரமசரியம் - கற்று விரதம் அநுட்டித்து விவாகஞ் செய்யாமல் இருக்குநிலை.
அன்னம் - சோறு.
பிக்ஷை - யாசகம்.
அகங்காரம் - கர்வம்.
பயிலுதல் - பழகுதல்.
விதி - பிரமாணம்.
சன்மார்க்கம் - நன்னடை.
சாஸ்திரம் - கற்கும்நூல்.
வயோதிகம் - முதுமை.

பிள்ளைகள் கல்விகற்றற்குரிய இடமே வித்தியாசாலையெனப்படும். வித்தியாசாலைகளிலே கற்கவேண்டியவைகள் எவைகள் என்பதைப் பற்றி இக்காலத்திலே அறிந்திருப்பவர்கள் மிகச் சிலரினும் சிலரே. இக்காலத்து வித்தியாசாலைகளிலே கற்பிக்கப்படவேண்டியவைகளெல்லாம் கற்பிக்கப்படாமையே அவர்கள் அறியாமைக்குக் காரணமாயது. இந்தியாவிலும் இலங்கையிலும் முற்காலத்திலே கற்பிக்கப்பட்ட கல்வியின் தன்மைகளை ஆராய்ந்து பார்த்தால், கற்கவேண்டியவைகள் எவைகள் என்பதை நன்றாய் அறிந்துகொள்ளலாம்.

முற்காலத்திலே ஒரு சிறுபிள்ளைக்கு ஐந்துவயது ஆனவுடனே வித்தியாரம்பம் செய்யப்படும். அப்போது அப்பிள்ளை "பதினெட்டு அல்லது முப்பத்தாறு வயது வருமளவும் விவாகஞ் செய்யேன்" என்றும் "ஆசிரியனுக்குக் கீழ்ப்படிந்து அந்நிலைக்கு உரிய விரதங்களை அநுட்டிப்பேன்" என்றும் சத்தியஞ் செய்வான். அப்

போது தந்தை தாயரின் சம்மதத்தோடு ஆசிரியன் அப் பிள்ளையை ஏற்றுக் கல்வி கற்பிப்பான். கற்கும் அவ்வ ளவு காலமும் அப்பிள்ளை ஒழுகும் ஒழுக்கமே பிரமசரிய ஒழுக்கம் என்று சொல்லப்படும். இப்படி ஒரு ஆசிரிய னுக்குக் கீழமைந்த இருபது அல்லது முப்பது பிள்ளைக ளைக் கொண்டதே அக்காலத்து வித்தியாசாலை. பெரும் பாலும் அப்பிள்ளைகள் அயல்வீடுகளிலே சென்று அன் னப்பிக்ஷை ஏற்று வந்து ஆசிரியனுக்குங் கொடுத்துத் தாமும் உண்பார்கள். இதனாற் பெருஞ் செல்வருடைய பிள்ளைகள் தாமும் அகங்காரம் சிறிதும் இன்றித் தாழ் மையான குணத்தைப் பயின்றுகொள்வார். ஆசிரியன் சைவசமய நூல்களிலே விதிக்கப்பட்ட பிரமசரிய ஒழு க்கத்துக்கு வேண்டிய விதிகளையும் பிறவற்றையும் படிப் படியே கற்பிப்பான். அவன் கற்பித்தபடியே பிரமசாரி களாகிய அப்பிள்ளைகள் ஒழுகுவார்கள். அப்போது எல்லா நன்மைகளுக்கும் ஏதுவாய அடக்கம் என்னும் குணம் அவர்களிடத்தே இனிது விளங்கும். ஆசிரியன் அப்பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் கல்வியானது, தெய்வ பக்தி, சன்மார்க்கம், சாஸ்திரப்பயிற்சி, சரீரத்தைப்பே ணல், என நால்வகைப்படும். அப்பிள்ளைகள் இளமையி லேயே தெய்வ பக்திமான்களாயும் சன்மார்க்கராயும் வளருகின்றார்கள். அப்போதுதானே, அப்பிள்ளைகள் பிரமசரிய ஒழுக்கத்தை முடித்தபின் விவாகஞ் செய்து இல்லறத்தை நடத்துதற்குரிய தன்மைகளையும், பின்பு வயோதிகப் பருவத்திலே துறவறத்தை நடத்துதற்கு

உ

கணபதி துணை.

# பாலபாடம்.

## நான்காம்புத்தகம்.



### க. ஆரம்பம்.

காரணம் - ஏது.
ஊழ் - பழவினை.
சித்தி - கைகூடுதல், நிறைவேற்றம்.
பிரணவம் - ஓங்காரம்.
விக்கினம் - இடையூறு.
மூர்த்தம் - வடிவம்.

பிள்ளைகளே!

நீங்கள் பாலபாடம் மூன்றும் புத்தகம் படித்து முடித்து, இப்பொழுது பாலபாடம் நான்காம்புத்தகம் படிக்க ஆரம்பிக்கின்றீர்கள். யாவனொருவன் யாதொரு தொழிலையேனும் செய்யத் தொடங்கும்போது அத் தொடக்கம், ஆரம்பம் என்று சொல்லப்படும். பிள்ளைகள் கல்விகற்கத் தொடங்குவதும் ஆரம்பம். உண்ணத் தொடங்குவதும் ஆரம்பம். பயிரிடுவோர் உழத்தொடங்குவதும் ஆரம்பம். வணிகர் வாணிகஞ் செய்யத் தொடங்குவதும் ஆரம்பம். அரசர் அரசாளத்தொடங்குவதும் ஆரம்பம்.

ஆரம்பம் ஆகிய எத்தொழிலும் முடிவு பெறும் என்பது நிச்சயம். அந்த முடிபு, ஆரம்பித்தவர் எண்ணியபடி முடியினும் முடியும்; முடியாதொழியினும் ஒழியும். எந்தத் தொழிலையும் ஆரம்பிக்கின்றவர்கள் அந்தத் தொழில் தாம் எண்ணியபடி முடியவேண்டும் என்னும் விருப்பம் உடையவர்களாய் இருக்கின்றார்கள். ஆயினும் சிலகாலத்து அவர்கள் எண்ணியபடி முடியாததற்குக் காரணங்கள் உண்டு.

தன்னால் முடியாத ஒரு தொழிலை ஒருவன் ஆரம்பிப்பானேயாயின் அது அவன் எண்ணியபடி முடியமாட்டாது. ஆதலினாலே எந்தத் தொழிலையும் ஆரம்பிக்கின்றவர்கள் ஆரம்பிக்க முன்னரே அது தம்மால் முடியுமோ, முடியாதோ, என்று ஆலோசித்தே ஆரம்பித்தல் வேண்டும். ஆரம்பித்தபின் ஆலோசித்தலாற் பயன் இல்லை. ஆலோசித்தே ஆரம்பித்த தொழில்களும் பின்பு முயற்சியின்மை முதலிய காரணங்களினாலே எண்ணியபடி முடியாமற்போதலும் உண்டு. ஆதலினாலே ஆரம்பித்த தொழிலை எண்ணியபடி முடிக்கவேண்டிய முயற்சி முதலியவைகள் யாவரிடத்தும் இருத்தல் வேண்டும்.

தக்க முயற்சி உடையவர்கள் ஆலோசித்தே ஆரம்பித்த தொழில்களும் சிலகாலத்து அவருடைய பழைய ஊழினாலே எண்ணியபடி முடியாமற்போதலும் உண்டு. ஊழின்வலி கடவுள் வழிபாட்டினாலே நீங்கும் அன்றிப்

பிறிதொன்றால் நீங்காது. ஆனமைபற்றியே எந்தத் தொழிலை ஆரம்பிப்பவர்களும் ஆரம்பித்தற்கு முன் கடவுள் வழிபாடு செய்தே ஆரம்பிக்கின்றனர். நாம் யாதொரு தொழிலையும் ஆரம்பிக்கும்போது வழிபட வேண்டிய கடவுள் சிவபெருமானுடைய மூத்த குமாராகிய விநாயகக்கடவுளேயாம். அவர் சிவபெருமானுடைய மூர்த்தங்களுள் முதன்மூர்த்தமாய் இருத்தலானும், வேதத்தின் முதலாகிய பிரணவவடிவமாய் இருந்தலானும், விக்கினங்களை ஊழின்வழியே ஆக்குபவரும் நீக்குபவருமாய் இருத்தலானும், எந்தத்தொழிலையும் ஆரம்பிக்கும்போது செய்யும் வழிபாடு அவர்க்கு உரியதாயிற்று. ஆதலினாலே, பிள்ளைகளே நீங்கள் இப்பொழுது ஆரம்பிக்கும் இத்தொழில் இடையூறின்றி இனிது முடியும் பொருட்டு அந்த விநாயகப்பெருமானை வழிபட்டே ஆரம்பித்தல் வேண்டும். பின்பு முயற்சியாய்ப் படிப்பீர்களாயின் சித்திபெறுவீர்கள்.

**பரீக்ஷைவினா.** ஆரம்பமாவது யாது? அதனை விளக்குக. ஆரம்பித்த ஒருதொழில் முடிவுபெறாமற் போதலும் உண்டா? எண்ணியபடி முடியாததற்கு இப்பாடத்திற் சொல்லிய காரணங்களை ஒவ்வொன்றாகச் சொல்லி விளக்குக. ஆரம்பிக்கும் போது என் கடவுள் வழிபாடு செய்தல்வேண்டும்? அப்போது நாம் ஆரை வழிபடுதல்வேண்டும்?

---

## உ. வித்தியாசாலை. 1

வித்தியாரம்பம் - வித்தையைக் [கற்பிக்கத்தொடங்கல்.
ஆசிரியன் - உபாத்தியாயன்.
அநுட்டித்தல் - செய்தல், கை [க்கொண்டு நடத்தல்.
பிரமசரியம் - கற்று விரதம் [அநுட்டித்து விவாகஞ் செய் யாமல் இருக்குநிலை.
அன்னம் - சோறு.
பிக்ஷை - யாசகம்.
அகங்காரம் - கர்வம்.
பயிலுதல் - பழகுதல்.
விதி - பிரமாணம்.
சன்மார்க்கம் - நன்னடை.
சாஸ்திரம் - கற்கும்நூல்.
வயோதிகம் - முதுமை.

பிள்ளைகள் கல்விகற்றற்குரிய இடமே வித்தியாசாலையெனப்படும். வித்தியாசாலைகளிலே கற்கவேண்டியனவைகள் எவைகள் என்பதைப் பற்றி இக்காலத்திலே அறிந்திருப்பவர்கள் மிகச் சிலரினும் சிலரே. இக்காலத்து வித்தியாசாலைகளிலே கற்பிக்கப்படவேண்டியவைகளெல்லாம் கற்பிக்கப்படாமையே அவர்கள் அறியாமைக்குக் காரணமாயது. இந்தியாவிலும் இலங்கையிலும் முற்காலத்திலே கற்பிக்கப்பட்ட கல்வியின் தன்மைகளை ஆராய்ந்து பார்த்தால், கற்கவேண்டியவைகள் எவைகள் என்பதை நன்றாய் அறிந்துகொள்ளலாம்.

முற்காலத்திலே ஒரு சிறுபிள்ளைக்கு ஐந்துவயது ஆனவுடனே வித்தியாரம்பம் செய்யப்படும். அப்போது அப்பிள்ளை "பதினெட்டு அல்லது முப்பத்தாறு வயது வருமளவும் விவாகஞ் செய்யேன்" என்றும் "ஆசிரியனுக்குக் கீழ்ப்படிந்து அந்நிலைக்கு உரிய விரதங்களை அநுட்டிப்பேன்" என்றும் சத்தியஞ் செய்வான். அப்

போது தந்தை தாயரின் சம்மதத்தோடு ஆசிரியன் அப் பிள்ளையை ஏற்றுக் கல்வி கற்பிப்பான். கற்கும் அவ்வ ளவு காலமும் அப்பிள்ளை ஒழுகும் ஒழுக்கமே பிரமசரிய ஒழுக்கம் என்று சொல்லப்படும். இப்படி ஒரு ஆசிரிய னுக்குக் கீழமைந்த இருபது அல்லது முப்பது பிள்ளைக ளைக் கொண்டதே அக்காலத்து வித்தியாசாலை. பெரும் பாலும் அப்பிள்ளைகள் அயல்வீடுகளிலே சென்று அன் னப்பிக்ஷை ஏற்று வந்து ஆசிரியனுக்குங் கொடுத்துத் தாமும் உண்பார்கள். இதனாற் பெருஞ் செல்வருடைய பிள்ளைகள் தாமும் அகங்காரம் சிறிதும் இன்றித் தாழ் மையான குணத்தைப் பயின்றுகொள்வார். ஆசிரியன் சைவசமய நூல்களிலே விதிக்கப்பட்ட பிரமசரிய ஒழு க்கத்துக்கு வேண்டிய விதிகளையும் பிறவற்றையும் படிப் படியே கற்பிப்பான். அவன் கற்பித்தபடியே பிரமசாரி களாகிய அப்பிள்ளைகள் ஒழுகுவார்கள். அப்போது எல்லா நன்மைகளுக்கும் ஏதுவாய அடக்கம் என்னும் குணம் அவர்களிடத்தே இனிது விளங்கும். ஆசிரியன் அப்பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் கல்வியானது, தெய்வ பக்தி, சன்மார்க்கம், சாஸ்திரப்பயிற்சி, சரீரத்தைப்பே ணல், என நால்வகைப்படும். அப்பிள்ளைகள் இளமையி லேயே தெய்வ பக்திமான்களாயும் சன்மார்க்கராயும் வளருகின்றார்கள். அப்போதுதானே, அப்பிள்ளைகள் பிரமசரிய ஒழுக்கத்தை முடித்தபின் விவாகஞ் செய்து இல்லறத்தை நடத்துதற்குரிய தன்மைகளையும், பின்பு வயோதிகப் பருவத்திலே துறவறத்தை நடத்துதற்கு

ரிய தன்மைகளையும் அவ்வாசிரியனிடத்திலே கற்றுக் கொள்ளுகின்றார்கள். இல்லறமாவது மனையாளோடு கூடியிருந்து செய்யுந் தருமம். துறவறமாவது உலகப்பற்றை நீக்கியிருந்து செய்யும் கடவுள்வழிபாடு.

ஆகவே முற்காலத்திலே சைவசமய வித்தியாசாலைகளிலே கற்பிக்கப்படுபவைகள் எவைகள் என்றால், தெய்வபக்தியும் சன்மார்க்கமும் சாஸ்திரப்பயிற்சியும் சரீரத்தைப் பேணுதலுமாகிய இவைகளேயாம். இவ்விதமான கல்வியை நம்முன்னோர் இளமைப்பருவத்திலே பெற்றுக்கொண்டமையாலன்றோ மிகமேலான தெய்வபக்தியுடையவர்களாயும் சன்மார்க்கராயும் சரீரப்பெலம் உடையராயும் இருந்தார்கள்.

பரீக்ஷவினா வித்தியாசாலையாவது யாது? வித்தியாசாலைகளிலே கற்கவேண்டியவைகளை இக்காலத்தார் அறியாததற்குக் காரணம் என்ன? முற்காலத்திலே கற்பிக்கப்பட்ட கல்வியின் தன்மைகள் என்ன? அவைகளை ஒழுங்காகச் சொல்லிவிளக்குக. அவ்விதமான கல்விகளைக் கற்றமையால் நம்முன்னோர் எவ்விதமாய் இருந்தார்கள்?

---

## ௩. வித்தியாசாலை. II.

வகை - விதம், பிரிவு.
பண்டைக்காலம் - முற்காலம்.
துர்மார்க்கம் - கெட்டநடை.
துர்க்கந்தம் - கெட்டமணம்.
எத்துணை - எவ்வளவு.
சாமர்த்தியம் - வல்லமை, கெட்டித்தனம்.

இக்காலத்து வித்தியாசாலைகளிலே தெய்வபக்தி முதலிய நால்வகைக் கல்விகளுள்ளே சாஸ்திரப்பயிற்சி

ஒன்றுமே கற்பிக்கப்படுகின்றது. ஏனையவகைக் கல்விக ளெல்லாங்கனுக்கண்டதுபோலாயின. அவைகளின் மண மேனும் நமது வித்தியாசாலைகளிலே வீசப்பெற்றிலேம். சில வருடங்களின் முன்னே தொடங்கிய சைவவித்தி யாசாலைகள் ஆரம்பத்திலே பண்டைக்காலத்து வித்தி யாசாலைகளை ஒருவாறு நினைப்பூட்டுவனவா யிருந்தன. அவைகள் தாமும் இப்பொழுது மின்னி மறையுந் தன் மையாயின. இப்பொழுது வித்தியாசாலைகளிலே கல்வி கற்கும் பிள்ளைகள் தெய்வம் இல்லை என்று சொல்லப் பின்னில்லார். துர்மார்க்கங்களே சன்மார்க்கங்கள் என் பார். வஸ்திரத்தைப் பழுதாக்கித் துர்க்கந்தம் வீசும் வெயர்வையைச் சரீரத்தினின்றும் வெளியே வராமற் பாதுகாத்துக்கொள்வதே புத்தி என்பார். பிரமசரிய ஒழுக்கமாவது யாது என்று மேல்வருணத்தாராகிய பிராமணராவது அறிவாரா? பிரமசரிய ஒழுக்கத்திலே வழுவாது ஒழுகினவர்கள் யாரேனும் அம்மேல்வருணத் தாருள்ளேயாயினும் உளரா? உளர் என்று சொல்வதற்கு ஒருவருக்கும் நா எழாது என்பதற்குச் சிறிதும் சந்தே கமே இல்லை.

நம்மை ஆளும் அங்கிலேய அரசினர் நாம் கொடுக் கும் இறைப் பணத்துள் ஓர் பகுதியை நமக்குக் கல்வி கற்பிப்பதிலே செலவழிக்கின்றனர். கல்வி கற்கும்பிள் ளைகள் எழுத வாசிக்க வல்லராயும் கணிதம் முதலிய சில சாஸ்திரங்களில் வல்லராயும் இருக்கின்றார்களோ?

என்று மாத்திரம் பரீக்ஷித்துப் பார்த்து அக்கல்வி கற்பித்த ஆசிரியர்களுக்குக் கற்பித்த அளவுக்குத் தக்க பணம் கொடுக்கின்றார்கள். அப்பணத்தைப்பெற விரும்பிய ஆசிரியர்கள் எல்லாரும் தெய்வபக்தி முதலிய மூவகைக் கல்வியையும் கற்பியாது விட்டு, பணம் பெறுதற்கு வேண்டிய ஓர்வகைக் கல்வியாகிய சாஸ்திரப்பயிற்சியையே கற்பிக்கின்றனர். ஆதலினாலே நம்மவர் கல்வியிலே எத்துணைச் சாமர்த்தியம் உடையராயினும் காற்பங்கு கல்வியே கற்றவர் ஆகின்றனர். இப்படியே காற்பங்கு கல்வியை ஓரளவுக்குக் கற்றுக்கொண்ட மாத்திரத்தே நம்மவர்கள் கல்விகற்றுவிட்டோமென்று கூத்தாடுகின்றனர். தெய்வபக்தி முதலிய மற்றைக் கல்விகளை இளமைப் பருவத்திலே வித்தியாசாலைகளிலே கல்லாமையால் வருங் கேடு எத்துணைப் பெரிது என்பதை அவர்கள் சிறிதும் சிந்திக்கின்றார்களில்லையே. வித்தியாசாலைகளிலே கற்கவேண்டியவைகள் தெய்வபக்தி சன்மார்க்கம் சாஸ்திரப்பயிற்சி சரீரத்தைப் பேணும்விதம் என்னும் நால்வகைக் கல்விகளுமே என்பதை நம்முன்னோர் அறிந்திருந்ததுபோல நம்மவர்கள் அறியாதிருத்தல் எவ்வளவு துக்கத்துக்கு இடமாம்.

**பரீக்ஷைவினா.** இக்காலத்து வித்தியாசாலைகளைப் பற்றி என்ன சொல்லப்பட்டிருக்கின்றது? ஒவ்வொன்றாகச் சொல்லி விளக்குக.

---

## ச. பாலைவனம்.

வாணிகம் - வியாபாரம். ஓய்தல் - தணிதல்.
மாரி - மழை. பிரயாணி - வழிநடப்போன்.

இவ்வுலகத்தின் மேற்பரப்பு நிலம் நீர் என இரண்டு பகுப்பாய் இருக்கின்றது. நிலமானது அதன்தன்மையினுலே குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என நான்காகப் பகுக்கப்படும். மலைசார்ந்த நிலமே குறிஞ்சி; காடுசார்ந்த நிலமே முல்லை; வயல்சார்ந்த நிலமே மருதம்; கடல்சார்ந்த நிலமே நெய்தல். இவற்றை யொழியப் பாலைநிலம் என ஓர் பகுப்பும் உண்டு. அது மற்றை நான்கு நிலங்களிலும் இடையிடையே காணப்படும்.

பாலைநிலத்திலே புல் பூண்டு முதலியன முளையா. இந்த நிலமானது ஆசியாவிலும் ஆபிரிக்காவிலும் அதிகமாயுண்டு. அங்கே மிகப் பெரிய பாலைவனங்கள் இருக்கின்றன. பாலைவனமானது நீர் நிழல் இல்லாத மிகப் பெரிய கொடிய மணற் காடாயிருக்கும்.

ஒருதேசத்திலிருந்து மற்றத்தேசத்துக்கு வாணிகம் முதலிய காரணமாகப் போகும் பிரயாணிகள் சிலகாலத்துப் பாலைவனங்களுக்கூடாகவே போகவேண்டும். அவ்வழியாற் செல்லும் பிரயாணிகள் அநேகமான நாட்கள் செல்லவேண்டிய அப்பிரயாணங்களில் தண்ணீர்த் தாகத்தினுல் மிக வருந்துவார்கள். சில வனங்களில் இடையிடையே சில கிணறுகள் உண்டு. அவ்விடங்களுக்குப்

பாலைவனப் பசுந்தரை என்று பெயர். அப்பசுந்தரையி லே புற்கள் பூண்டுகள் வளரும். இவ்விதமான கிணறு கள் மிக அருமையாயிருத்தலாலும் ஒன்றுக்கொன்று நெடுந்தூரத்தில் இருத்தலாலும் வழிதப்பிப்போய் அக்கி ணறுகளைக் கிட்டிச் சேரமாட்டாமையாலும் அவ்விடங் களிலே சூரியனுடைய வெப்பம் மிகக் கொடியதாயிருத் தலாலும் பலமுறையும் பிரயாணிகள் தாகத்தால் இறந் துவிடுவதும் உண்டு. அவ்வனங்களிலே இதுவே வழி யென்று குறித்துக்கொள்ளுதற்கு யாதொருபொருளும் இல்லாமையாலும் நடந்த வழியை அடிக்கடி மணல் மூடி விடுதலாலும் நேரான வழியைக் குறித்துச் செல்வது மிக அரிது.

சில காலங்களிலே அங்கே சுழல்காற்று உண்டாய் மணலை மேலே எழுப்பி மண்மாரி பொழிவதுபோல் மணல்களைப் பிரயாணிகளின்மேற் பொழிந்து அவர்களை மணலின்கீழ் அமிழ்த்திவிடும். அந்த மண்மாரி பொழி ந்து ஓய்ந்தபின் பார்த்தால், பெரிய கூட்டமான மனிதர் களும், குதிரைகளும், ஒட்டகங்களும்சென்ற அவ்விட த்திலே ஒரு மணல்மலையை மாத்திரம் காணலாம்.

இப்படிப்பட்ட பெரிய பாலைவனங்களைக் கடந்து செல்வதற்குப் பிரயாணிகளுக்குப் பேருதவியாயுள்ளது ஒட்டகமே. பிரயாணிகள் கள்வருக்கும், வழிதப்பிப் போதற்கும், அஞ்சிப் பெரும்பாலும் கூட்டம் கூட்ட மாய்ப் போவார்கள். சிலகாலத்திலே ஆயிரக்கணக்கான

வர்களும் ஒருங்குகூடிச் செல்வார்கள். ஆபிரிக்காவிலுள்ள பெரியபாலைவனத்துக்குச் 'சகாரா' என்று பெயர். இவ்வுலகத்திலே மனிதர் திருத்திப் பயிரிடுதற்கு உதவாத நிலம் இப்படியே அதிகமாய் உண்டு.

**பரீக்ஷை வினா.** இவ்வுலகத்தின் மேற்பரப்பு எப்படிப் பிரிக்கப்பட்டிருக்கின்றது? நிலம் அதன் தன்மையினால் எவ்வாறு பகுக்கப்படும்? குறிஞ்சியாவது யாது? முல்லையாவது யாது? மருதமாவது யாது? நெய்தலாவது யாது? பாலையாவது யாது? பாலைவனம் எங்கே அதிகமாய் உண்டு? அதன் தன்மைகளைச் சொல்லு.

---

## ரு. நெல்லு.

மத்திமம் - இடை, நடு.
கார்காலம் - மழைக்காலம்.
பரம்படித்தல் - பலகையினால் ஒப்புரவாக்குதல்.
பெய்தல் - இடுதல்.
கட்டல் - களைதல்.
யாத்தல் - கட்டுதல்.
வைக்கோல் - நெல் முதலியவற்றின் தாள்.
இல் - வீடு.
மெய் - உடம்பு.
எய்துதல் - அடைதல்.
மக்கட்பிறப்பு - மனிதப்பிறப்பு.
ஓம்புதல் - பாதுகாத்தல்.

மனிதர் பசியைத் தணித்தற்கு உண்ணும் உணவுக்குரிய தானியங்கள் பல உள. அவற்றுள் பெரும்பாலும் உபயோகப்படும் தானியம் நெல்லே.

நெல்லு இந்து தேசத்துக்குரியது. அங்கிருந்தே அது மற்றைத் தேசங்களிலும் பரம்பியது. நெற்பயிருக்குவெய்யில் அதிகமாகவேண்டும், ஆதலினாலே அது

உட்டணமான தேசங்களில் மாத்திரமே விளையும். நெல் விசேஷமான பலன் கொடுக்கும் தானியங்களுள் ஒன்று. இந்தியாவிலும் இலங்கையிலும் நீர்வளமுள்ள நாடுகளிலே ஒரேநிலத்தில் வருஷத்திலே இரண்டு அல்லது மூன்றுமுறை நெற்பயிர் உண்டாக்கப்படுகின்றது. ஆயினும் முதன்முறையிலும் பார்க்க மற்றை முறைகளிலே குறைந்த காலத்துள் விளையும் இனமான நெற்பயிர்களை உண்டாக்கப் படுதலால் அவற்றால் வரும் பிரயோசனமும் குறைவாயே இருக்கும். நெல்லிலே முத்துச்சம்பா முதலிய பலவிதமான சம்பாக்களும், கல்லுண்டை முதலிய பலவிதமான பெருநெற்களும், வெள்ளைச்சோலா முதலிய பலவிதமான சிறுநெற்களுமாகப் பற்பலவகை உண்டு. உத்தமமான நெல்வகைகள் விதைத்தபின் ஏறக்குறைய ஆறும் மாசத்திலும், மத்திமமாயின, நான்காம் மாசத்திலும், சில இரண்டு மாசங்களிலும் விளையும்.

நெற்பயிர் உண்டாக்கும் விதங்கள், புழுதியில் விதைப்பது, ஈரத்தில் விதைப்பது, சேற்றிலே நென்முளை விதைப்பது, வெள்ளத்திலே நெற்பயிர் நாற்று நடுவது எனப் பலவிதமாம். புழுதியில் விதைப்பவர்கள் கோடைக்காலத்திலே எருவிட்டு நிலத்தை உழுது புழுதியாக்கி ஆடி மாசத்திலும், ஈரத்திலே விதைப்பவர்கள் ஆவணி மாசத்திலே கார்காலமழை பெய்தவுடனும் விதைப்பார்கள். சேற்றிலே நென்முளை விதைப்பவர்கள் நீர்ப்பாய்ச்சலால் விளைகின்ற நாடுகளிலே நெல்லை

முளைக்கச்செய்து வயல்களுக்கு நீர்ப்பாய்ச்சி உழுது சேறுக்கிப் பரம்படித்து அம்முளைகளை விதைப்பார்கள். வெள்ளத்திலே நடுபவைகள் நாற்றங்கால்கள் என்று சொல்லப்படும். பாத்திகளிலே நாற்றிட்டு வளர்த்து, சாண்பயிரானவுடனே பிடுங்கி நடுவார்கள். உழுதல், மண்ணின் இறுகிய அணுக்களைக் காய்ச்சி நெகிழச் செய்யும் பொருட்டே.

உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால் யாத்தல், காத்தல், என்னும் இவ்வைந்தும் நெல்லைவிளை விப்பார்க்கு இன்றியமையாத தொழில்களாம். நெற்ப யிர்கள் இடையிடையே ஓரளவுக்கு நுண்ணிய துவாரங் களைக் கொண்டு இறுகிய கணுக்கள் பொருந்திய தாள் களை உடையவைகளாய் வளரும். உள்ளே துவாரம் உடைய தாளுக்குப் பெலத்தைக் கொடுக்கும் அக்கணு க்களிலே, பயிர்வளர்ச்சிக்குரிய பனியையும் நீரையும் ஏந்திக்கொள்ளும் புற்கள்போன்ற இலைகள் உண்டாம். கணுக்களின் நுண்ணிய துவாரங்களினலே எருநீர்ச்சா ரம் மேலேசெல்ல இரண்டு மூன்று முழ உயரத்துக்கு வளர்ந்த பயிர்கள் கதிர்களை ஈனும். உரியகாலத்தே கணுக்களின் துவாரங்கள் அடைக்கப்பட்டுச் சாரம் மேலே செல்லாதொழிய, கதிர் முற்றிவிளையும். விளைந் தபின்பு அரிவாளினலே நெல்லுத்தாள்களை அறுத்து அரிஅரியாகச் சேர்த்து நெற்போர்கள் உண்டாக்கப்ப டும். பின்பு நெற்போர்களைச் சரித்து ஒன்பது பத்து மாடுகளையாவது எருமைகளையாவது கயிற்றினலேபிணை

த்து அப்போரின்மேற் சுற்றிச்சுற்றி வளைத்தபின், மாடு களுக்கு உணவாகும் வைக்கோலை நீக்கி நெல்லை வேருக் குவார். பதரை நீக்கி வேருக்கிய நெல்லைத் தமக்கும் பிறர்க்கும் உணவாகும்பொருட்டு இல்லிற் சேர்ப்பார்.

மெய்வருந்த நோக்கிப் பிற தொழில்களைச் செய்து பொருளெய்திய வழியும் உணவின்பொருட்டுப் பயிரிடு வார்மாட்டுச் செல்லவேண்டுதலின் அப்பயிரிடுந் தொ ழிலே தலையானது. பிறதொழில் செய்வார் தாமும் மக்கட்பிறப்பினராயிருந்தும் பிறரைத் தொழுது அவர் சில கொடுப்பத் தம்முயிரோம்பிவாழ்வார்.

**பரீக்ஷவினு.** மனிதருக்குப் பசியைத் தணிப்பதற் குப் பெரும்பாலும் உதவுவது எது? நெல்லைப்பற்றிக் கூறப்ப ட்டவைகளை ஒவ்வொன்ருகச் சொல்லுக. அதை உண்டாக்குவ தெப்படி? நெல் விளைவிப்பார்க்கு இன்றியமையாத தொழில் கள் எவை? நெற்பயிரின் தன்மைகளைச் சொல்லுக. அவைகள் விளைந்தபின் செய்வது யாது? ஏன் பயிரிடுந்தொழில் தலையா னது?

---

## கூ. மார்க்கம். 1.

சத்தம் - கேட்டறிதல். பூரணம் - நிறைவு.
பரிசம் - தொட்டறிதல். ஓட்டுதல் - இயக்குதல்.
சாகரம் - சமுத்திரம். அகம் - உள், மனம்.

மார்க்கமாவது உலகத்தவர் கடவுளை அடையலா மென்று நடக்கிற வழி. கடவுள் ஒருவர் உண்டு என்பது

உலகத்தவர் எல்லார்க்கும் பெரும்பாலும் ஒத்த துணிபு. கடவுள் இல்லையென்று சொல்பவர் வாயாற் சொல்ப வரே யன்றி மன உடன்பாட்டுடனே சொல்பவரல்லர். ஆயினும் கடவுளை உள்ளபடி கண்டோம் என்று சொல் பவர் ஒருவரும் இல்லை. நமது உயிரை நாம் காணமாட் டோம். பின்னை உயிர்க்குயிரா யிருக்கும் கடவுளை எப்ப டிக் காணலாம்? கண்வழியாக ஒருபொருளைக் காண்பது உயிர். காணப்படும் பொருள் உயிராயின் கண்வழியாகக் காண்பது எது? ஆதலின் இக் கண்ணினாலே உயிரைக் காணுதல் கூடாது. ஆகவே உயிர்க்குயிராகிய கடவுளை யுங் காணுதல் கூடாது.

சத்தம் பரிசம் முதலிய உணர்ச்சி இல்லாதபோ தும் கனவிலே உடம்பினுள்ளே பிறிதொன்றிருந்து அநுபவம் நிகழ்த்துதலை நாம் அறிகின்றோம். அப்படி அநுபவிக்கும் அதுவே உயிர் என்கின்றோம். எல்லா உயிரும் பூரணமான இன்பத்தை அநுபவிக்க விரும்பு கின்றன. அப்படி அநுபவிக்கும் உயிர் இவ்வுலகத்தில்லை. தம்மால் முடியாதாயினும் பிறர் உதவியைப் பெற்று அநுபவிக்கலாமோ என்றால் அதற்குப் பூரணமான இன்பத்தை உடையவர் ஒருவர் வேண்டும். அவரே உயிர்க்குயிராகிய கடவுள் என்கின்றோம். பூரணமான இன்பத்தை அடையும்பொருட்டு உயிர்கள் இன்பசா கரமாகிய கடவுளையே தமக்கு உதவும்படி வேண்டு கின்றன.

புறத்தேயுள்ள கிரகங்கள் நட்சத்திரங்கள் வாயு நீர் முதலியவற்றின் தன்மைகளை ஒருவன் அறிவது அவசியம். நீராவி யந்திரங்களை ஓட்டுதல் முதலியனவெல்லாம் அவற்றின் தன்மைகளை ஆராய்வதனால் வந்தனவல்லவா? அகத்தே உள்ள கோபம் ஆசைமுதலியவற்றின் தன்மைகளை ஒருவன் அறிவது அதனினும் அவசியமாம். ஒருவன் கோபம் ஆசை முதலியவற்றை அடக்கப் பயின்றுகொள்வது, நீராவியந்திரங்களை ஓட்டப் பயின்ற அதனைக் காட்டினும் விசேடம் அல்லவா? இப்பயிற்சி, மார்க்கத்தினால் அல்லாமல் ஒருவனுக்கு வரமாட்டாது. ஆதலின் மார்க்கம் அத்தியாவசியகம் எவர்க்கும் வேண்டியது. மார்க்கம் இல்லாதவன் எல்லாத் தீங்கும் செய்யும் ஒருவன் என்றே எண்ணப்படுவான்.

**பரீக்ஷைவினா.** மார்க்கமாவது யாது? ஏன் உயிரைக்காணுதல் கூடாது? ஏன் கடவுளைக் காணுதல் கூடாது? உடம்பினுள்ளே உயிர் இருக்கின்றது என்பதை எதனால் நிச்சயிக்கலாம்? ஏன் கடவுள் இருத்தல்வேண்டும் என்கின்றோம்? ஒருவனுக்கு என்ன அவசியமானது? அதனிலும் அவசியமானது என்ன? அது எதனால் வரும்? மார்க்கம் இல்லாதவன் எப்படி எண்ணப்படுவான்.

---

## எ. இராமாயணச் சரித்திரம். 1.

மக்கட்பேறு – பிள்ளைப்பாக்கியம். அநுமதி – சம்மதி.
பத்தினி – மனைவி. கைம்மாறு – பிரதி உபகாரம்.

முன்னொருகாலத்திலே அயோத்தி நகரத்திலே தசரதர் என்னும் ஒரு அரசர் இருந்தார். அவர்க்குநெடு

நாளாக மக்கட்பேறின்மையின் மனம் மிகவருந்தி முடி பிலே அதன்பொருட்டு ஓர் யாகஞ் செய்தார். அதினாலே தசரதருடைய முதன்மனைவியாகிய கோசலையிடத்தே இராமசுவாமி பிறந்தார். மற்றைச் சுமித்திரை முதலிய மனைவியரிடத்தே இலக்குமணர் பரதன் சத்துருக்கன் எனப் பெயரிய மூவர் பிறந்தனர். அவர் நால்வரும் மிக இளமைப்பருவத்திற்றானே எக்கலைகளையுங் கற்று மிக்க வல்லவராயினர். அவருள் இராமசுவாமியோடு இலக்குமணரும் பரதனோடு சத்துருக்கனும் உயிருமுடலும் போலத் துணையாய்ச் சேர்ந்துகொண்டனர்.

அக்காலத்தே விசுவாமித்திரர் என்னும் ஒரு முனிவர் தசரதராசனிடத்து வந்து, தாம் செய்யும் வேள்விக்கு இராக்கதரால் இடையூறு வராமற் காக்கும்பொருட்டு இராமசுவாமியைத் தம்மோடு அனுப்பும்படி வேண்டினார். அரசன் அதற்கு உடன்பட்டு அநுமதி கொடுக்க இராமசுவாமியும் இலக்குமணரும் விசுவாமித்திரமுனிவரைப் பின்றொடர்ந்து போயினர். போகும்போது முனிவர் அவ்விருவர்க்கும் போர்த்தொழிற்குரிய பல வித்தைகளையும் மந்திரங்களையும் கற்பித்தனர். பின்பு விசுவாமித்திரர் செய்த யாகத்திலே எதிர்த்து வந்த இராக்கதர்களையெல்லாம் இராமசுவாமி வென்று அம்முனிவர் மனமகிழும்படி செய்தனர். அவர் செய்த வேள்வியாற் ...

யாகஞ்செய்து முடிந்தபின்பு விசுவாமித்திரர் இராமசுவாமி செய்த உதவிக்குக் கைம்மாருக அவர்க்குமிதிலைக்கரசனுகிய சனகமகா ராசனுடைய புத்திரியாகிய சீதையை விவாகஞ் செய்துவைத்தல் வேண்டுமென நிச்சயித்து அவ்விராமலக்குமணர்களோடு அம்மிதிலை நகரை யடைந்தனர். போகும்போது வழியிலே முன்னொரு சாபத்தினுலே கல்லுருவாய்க் கிடந்த அகலிகை என்னும் முனிபத்தினி, இராமசுவாமியினுடையபாதத் துகள் படுதலினுலே கல்லுருவை நீங்கி முன்போலப் பெண்ணுருவைப் பெற்றனள்.

**பரீக்ஷைவினு.** இப்பாடத்தின் சரித்திரத்தைச் சொல்லு? அகலிகை சாபம் பெற்ற காரணம் என்ன?

---

## அ. திமிங்கிலம்.

| | |
|---|---|
| வசித்தல் - இருத்தல். | தோணி - தெப்பம். |
| மற்சம் - மீன். | மரக்கலம் - தோணி. |
| சுவாசித்தல் - உயிர்த்தல். | குவை - கூட்டம். |

எல்லாப் பிராணிகளிலும் மிகப் பெயரிது திமிங்கிலமே. அது பெரும்பாலும் நாற்பது ஐம்பது முழநீளமுள்ளது. அது நீரில் வசிப்பதாயினும் மீனினத்தைச் சேர்ந்ததன்று. அது மற்சம் போலாகாது மனிதரைப் போலவே சுவாசப்பை மூலமாகச் சுவாசிக்கின்றது. அது அப்படிச் சுவாசித்தற்பொருட்டு இடையிடையே நீரின் மேற்புறத்து வரும்; வாரொழியின் சுவாசத்தை

அடக்குதலினாலே இறந்துபோகும். அது சுவாசிக்கும் போது மூக்கின்வழியாய் மிக்க தண்ணீர் பத்துப் பன்னிரண்டு முழத்துக்கு அதிக மொலியோடு மேலெழும்.

திமிங்கிலத்துக்கு வாலிலேதான் மிகவும் பெலம் உண்டு. அது வாலினால் அடித்துச் சிறு தோணிகளைக் கடலிலே கவிழ்த்து உடைத்துவிடுகின்றது. இத்துணைப் பெரும் பிராணிக்கு மிகச் சிறு மற்சங்களை மாத்திரம் உண்ணத்தக்கதாகக் கண்டம் மிகச் சிறியதுவாரம் உடையதாயிருக்கின்றது என்று ஐரோப்பியர் கூறுகின்றனர். இந்தியர் அதனை யானைமீனை விழுங்குமீன் என்கின்றனர்.

மிகக் குளிரினாலே தண்ணீர் எப்பொழுதும் உறைந்திருக்கும் வடதுருவ சமுத்திரங்களிலே திமிங்கிலங்கள் அதிகமாய் வசிக்கின்றன. அவற்றின் எலும்பும் கொழுப்பும் மிக உபயோகப்படுவன. ஆகலின் அவைகளைப் பிடித்தற்கு அநேகர் மரக்கலங்களில் ஏறி வருடந்தோறும் அவ்விடத்துக்குச் செல்லுகின்றனர். அவ்விடத்தே அவர்கள் அடையும் இடையூறுகள் மிகப் பல. சிலகாலத்தே குளிரினால் வருந்துவார்கள்; சிலகாலத்தே அவர்களுடைய மரக்கலங்கள் மலைபோல நீரின்மேல் வரும் உறைந்த பனிக்குவைகளுக்கிடையே அகப்பட்டு உடைந்து அமிழ்ந்திப்போவதும் உண்டு; அல்லது விரைவிலே அம்மரக்கலங்களைச் சூழ்ந்த கடல்நீர் உறைந்து போக, அவைகளை அப்பாற் செலுத்திச் செல்ல முடியாமல் அவ்விடத்திற்றானே அவர்கள் நெடுநாளாயிரு

ந்து பசியால் வருந்தி இறந்துபோவதும் உண்டு. இவைகளையல்லாமல் திமிங்கிலத்தைப் பிடிப்பதிலும் பல இடையூறுகள் சம்பவிக்கின்றன.

அவர்கள் திமிங்கிலம் சுவாசித்தற் பொருட்டுக் கடலின்மேல் வருவதைக் கண்டமாத்திரத்தே அவ்விடத்தைக் குறித்துக்கொண்டு மரக்கலத்தைச் செலுத்திச் சென்று, அது மீட்டுஞ் சுவாசிக்கவருமளவும் எதிர்பார்த்திருப்பர். அது மீண்டு வந்தபோது போதிய அளவு சமீபமாயின் கயிற்றிலே சேர்க்கப்பட்ட ஈட்டியை அதன்மேல் எறிவார். அது தன்மேற் காயம் பட்டவுடனே அவ்வீட்டியையும் இழுத்துக்கொண்டு கடலுள் அமிழ்ந்தி நெடுந்தூரம்போய்விடும். எறிபட்ட அத்திமிங்கிலம் மீண்டும் சுவாசித்தற்பொருட்டு மேலே வரும் என்பதை அறிந்த அம்மனிதர் அது வெளியே வருமெனக் குறித்த அவ்விடத்திலே பின்பும் ஈட்டியால் எறியக் காத்துக்கொண்டுநிற்பர். இப்படிப் பலமுறை எறிந்தாலும் அது இறவாது பிழைத்துப்போவதும் உண்டு. அதிகமாக இரத்தத்தைக் கக்கினால் அதுவே அது இறத்தற்கேதுவாய காயத்தை அடைந்தது என்பதற்கு அறிகுறியாகும். இப்படிப்பட்ட காலத்தே அதற்குச் சமீபத்திலே நிற்பது புத்தியாகாது. அது வாலினாலே நீரை அடிப்பதினால் எங்கும் திரையும் நுரையும் மிக ஓங்கிப் பெருகும். அப்போது மரக்கலஞ் சமீபத்தில் நின்றால் அது நீருள் அமிழ்ந்துவது நிச்சயம். பின்பு

நெடுந்தூரத்தில் மரக்கலத்தைச் செலுத்திச் சென்று நின்ற அம்மனிதர், எல்லாம் ஓய்ந்தபின் வந்து இறந்து போன திமிங்கிலத்தை மரக்கலத்திலேற்றி அதனை வெட்டி எலும்பையும் கொழுப்பையும் எடுத்துக்கொண்டு செல்வார்.

**பரீக்ஷவினு.** பிராணிகளிலே பெரியது எது? அதன் நீளம் என்ன? அது என் நீரின் மேற்புறத்து இடையிடையே வருகின்றது? திமிங்கிலத்துக்கு அதிக பெலம் எங்கே உண்டு? அது என்ன செய்ய வல்லது? ஐரோப்பியர் என்ன சொல்கின்றனர்? இந்தியர் என்ன சொல்லுகின்றனர்? திமிங்கிலங்கள் எங்கே அதிகமாய் உண்டு? அவைகளை என் பிடிக்கின்றனர்? அவைகளைப் பிடிக்கச் செல்பவர்களுக்கு வரும் இடையூறுகளை ஒவ்வொன்ருகச் சொல்லு.

---

## கூ. மார்க்கம். 11.

மார்க்கம் - சமயம். [யுமுதவி. ஆயாசம் - இளைப்பு.
பரோபகாரம் - பிறர்க்குச்செய் வைதல் - ஏசுதல்.

உலகத்திலே மார்க்கங்கள் பல உண்டு. அவைகளுள் ஒவ்வொரு மார்க்கமும் தான்தானே மெய்ம்மார்க்கமென்றும் மற்றை மார்க்கங்களெல்லாம் பொய்யானவைகளென்றும் கூறும்; அவ்வளவோடு அமையாது மற்றை மார்க்கத்தவர் நித்திய நரகத்துக்குப் போவார்களென்றும் சொல்லும்.

உலகத்தவரனைவரையும் ஒரே மார்க்கத்தவராக்குவது எல்லாமார்க்கத்தவர்க்கும் உடன்பாடு. இதுபற்

றியே காலத்துக்குக்காலம் ஒரு மார்க்கத்தவர் மற்றை மார்க்கத்தவரைக் கொன்றார், வருத்தினார், என்று சொல்லப்படுகின்றது. எல்லார் முகமும் ஒருவர் முகம்போல ஒத்திருப்பினன்றே எல்லார் மனமும் ஒரு மார்க்கத்திற்கு உடன்படும். உலகத்திலே ஒருவர் முகம் மற்றொருவர் முகத்தை ஒவ்வாது; அதுபோலவே ஒருவர் மனம் மற்றொருவர் மனத்தை ஒவ்வாது. குளிர் இல்லாவிட்டால் சூடு இல்லை. துன்பம் இல்லாவிட்டால் இன்பம் இல்லை. ஆதலின் உலகத்திலே ஒன்றற்கொன்று வேறுபாடு இருத்தல்வேண்டியது அவசியம். ஆகவே பற்பல வேறுவகைப்பட்ட அறிவுடையா ரெவர்க்கும் பொதுவாய் ஏற்றதான ஒருமார்க்கம் உலகத்திருப்பினன்றே அது மேலான மார்க்கம் என்று சொல்லப்படும்.

மனம் விருப்பம் முதலியவற்றால் மனிதர் அநேகம் பேதமானவர்களாயிருந்தாலும் அவர்களைப் பொதுவாக நால்வகைப் பகுப்பாய்ப் பகுக்கலாம்.

முதலாவது:—முயற்சியாய் வேலை செய்பவர். அவர் வேறொன்றையும் அவதானிக்கமாட்டார்; முயற்சியாய் வேலைசெய்வதே அவர்க்கு வேண்டியது. "இந்த மடத்தைக் கட்டிவிடுதல்வேண்டும்; இது பெரிய தருமம்" என்றால் உடனே செய்துமுடிப்பார். பரோபகாரஞ் செய்தலிற் சிறிதும் ஆயாசப்படார்.

இரண்டாவது:—அன்பே வடிவமானவர். "ஒரு ஊரிலே ஒருவன் ஒரு பெரிய அரிய செயலைச் செய்

தான்; அவனே நல்லவன்" என்றமாத்திரத்தே, "எந்த ஊரிலே?", "அவன் ஆர்?", "அச்செயல் எவ்விதமானது?", "செய்ததுமெய்தானா?", என்னும் இவைகளுள் ஒன்றையுஞ் சிந்தியாது அச்சொல்லை நம்பி உடனே அவனிடத்தே அன்புடையராகின்றனர். அவர் கடவுளை விரும்புகின்றார். "கடவுள் இன்ன இடத்திலே இன்னாருக்கு இவ்விதமாக அருள் செய்தார்" என்ற மாத்திரத்தே வேறொரு ஆராய்வுமின்றி அதனை நம்பி அக்கடவுளிடத்தே அன்புடையராகின்றனர்.

மூன்றாவது:—அடக்கம் ஆனவர். அவர் ஒருவர் தம்மை வைதாலும் தாமவரை வைதற்கு உடன்படார். ஒருவர் சொல்லியதை மற்றொருவருக்குச் சொல்லார். கோபம் ஆசை முதலியவற்றை அடக்கிக்கொள்ளப் பார்ப்பார். அவரே மனத்திண்மை உடையவர்.

நாலாவது:—ஆராய்ச்சி உடையவர். இவரே எவற்றையும் தர்க்கித்து முடிக்கப் பார்ப்பவர். அவர் "மேலே எறியுங் கல்லு நிலத்துக்கு ஏன் வருகின்றது?" என்று ஆராய்வார். "இந்த உலகம் கடவுளால் உண்டாக்கப்பட்டது" என்றால், "ஏன் உண்டாக்கினார்?", "எப்பொழுது உண்டாக்கினார்?", "எப்படி உண்டாக்கினார்?", என்று ஆராய்வார்.

இந்த நால்வகைப் பகுப்பினர்க்கு மேற்பட, நமது சைவசமயம் ஒன்றுமே முறையே கிரியாமார்க்கம், பக்திமார்க்கம், யோகமார்க்கம், ஞானமார்க்கம், என நால்வ

கைப் பகுப்பினதாய் மேலாயது. கடவுளுக்குத் தொண்டும் பிற உயிர்க்கு நன்மையுஞ் செய்பவனே கிரியையாளன். கடவுளிடத்தே மேலாய பேரன்புடையவனே பக்திமான். மனத்தைப் பொறிவழியே போகாவண்ணம் அடக்கிக் கடவுளைத் தியானிப்பவனே யோகி. கடவுள் உயிர்க்குயிராயிருக்குந் தன்மையை அறிந்து அக்கடவுளோடு தன்னறிவு வேற்றுமையின்றிக் கலந்த நிலையில் இருப்பவனே ஞானி. சரியை கிரியை என்னும் இரண்டும் பக்திமார்க்கமாம். ஆகவே சைவசமயமானது உலகத்தவர் எவர்க்கும் பொதுவாய் ஏற்றதாய் மேலாயது.

**பரீக்ஷைவினா.** ஒவ்வொரு மார்க்கமும் கூறுவது என்ன? எல்லாமார்க்கத்துக்கும் என்ன உடன்பாடு? உலகத்தவரை ஒருமார்க்கத்தவராக்குவது அம்மார்க்கத்தவரால் முடியாது என்பதற்குக் காரணம் என்ன? சைவசமயம் பொதுவாய் எல்லார்க்கும் ஏற்ற மார்க்கம் என்பது எதனால்?

---

## கo. நெருப்புக் கோழி.

அகழுதல் - தோண்டுதல்.      வதக்குதல் - வாட்டுதல்.

ஆபிரிக்காவிலே காணப்படும் நெருப்புக்கோழி மற்றெல்லாப் பறவைகளிலும் மிகப் பெரியது. அது ஐந்து ஆறு முழ உயரம் உள்ளது. அதன் பாதம் இரண்டு விரல் மாத்திரம் உடையது. அது ஒட்டகத்தின் பாதம்போலிருத்தலால் அதை ஒட்டகப் பறவை என்று சொல்வதும் உண்டு.

நெருப்புக் கோழி நீர் நிழல் இல்லாத மணல்செறிந்த வெளியான தேசங்களிலே வாசஞ் செய்யும். காடுகளிலுள்ள பலவகையான காய்களும் தானியங்களும் புல் இலை பூ முதலியனவும் அதற்கு உணவாகும். அது சிலகாலங்களிலே சிறுகல் ஆணி முதலியவற்றையும் விழுங்குகின்றது.

நெருப்புக்கோழியின் முட்டை மிகப் பெரியது. அதற்கு வீடு இல்லை; மணலிலே குழியை அகழ்ந்து அக்குழியிலே முட்டை இடும். சூரிய வெப்பத்தினாலே குஞ்சு பொரிக்கப்படும். ஆயினும் ஆணும் பெண்ணுமாய்க் கூடி அம்முட்டைகளைக் காப்பதும் இராக்காலங்களிலே குளிர் படியாது அடைகாப்பதும் உண்டு. அவ்வழியாற் பிரயாணஞ் செய்யும் அத்தேசத்தவர்கள் அம்முட்டைகளை எடுத்து அதன் ஒருபுறத்தே துவாரஞ் செய்து அந்த ஓடே பாத்திரமாக நெருப்பில் வைத்து வதக்கி அதை உண்பார்கள். பின்பு அவ்வோட்டைத் தண்ணீர் வைத்திருக்கும் பாத்திரமாக உபயோகிப்பார்கள்.

நெருப்புக்கோழி மிகப் பெலமுள்ளது. அது எதிர்த்த மிருகங்களைப் பாதங்களினாலே உதைக்கும். அது உதைப்பது மற்றைப் பிராணிகளைப்போலப் பின்புறமாகவன்று முன்புறமாகவே. அதன் விரல்களிலே கூரிய நகங்கள் உண்டு. வேட்டையாடுவோர் அதிகம் சமீபித்துவிட்டால் சிலகாலங்களிலே அவர்களையும் எதிர்த்துத்

தள்ளிவிழுத்திக் காலால் உதைத்துவிடும். நெருப்புக் கோழி கூவுஞ் சத்தம் சிங்கங்கர்ச்சிப்பதுபோலிருக்கும்.

நெருப்புக்கோழியின் இறகு மிகவும் அழகானது. ஆதலினாலே அது அதிகம் விலையுள்ளது. இறகுக்காகவே இப்பறவையை வேட்டையாடிக் கொல்வார்கள். அத்தேசத்தவர்கள் அவைகள் முட்டையிடவரும் இடங்களிலே மறைந்திருந்து அப்பறவைகளை நுனியில் நஞ்சு பூசப்பெற்ற அம்புகளாற் குத்திக் கொல்வார்கள். வேட்டையாடுவோர் சிலகாலங்களிலே நெருப்புக்கோழியின் தோலைப் போர்த்து அப்பறவைகள் கூட்டமாய்ச் செல்லும்போது அவைகள் அறிந்து சந்தேகப்படாதபடி தாமும் அவைகளோடு கூடிச்சென்று அம்பினாலே ஒவ்வொன்றாகக் கொலை செய்துவிட்டு, பின்பு மீள வந்து எடுத்துக்கொண்டு செல்வார்கள். சிலர் அதிகம் விரைவான குதிரைகளின்மேல் ஏறியும் வேட்டையாடுவார்கள். நெருப்புக்கோழி நேராய் ஓடினால் அதைக் கிட்டிச் சேர்தல் அரிது; வளைந்து வளைந்து ஓடுவதே அதற்கியல்பு. குதிரையில் ஏறி வேட்டையாடுவோன் நேராய்த் துரத்திச் செல்வான். அது நெடுந்தூரம் ஓடிக் களைத்தபின், தன்னை முழுதும் மறைத்துவிட்டதாக எண்ணித் தலையை மணலினுள்ளே மறைத்துவிட்டு நிற்கும்; இவ்விதமாய் வேட்டையாடுவோன் கையில் இலகுவாய் அகப்பட்டுவிடும்.

நெருப்புக் கோழியின் மாமிசம் அத்தேசத்தவர்க்கு உணவாகின்றது. ஆண்பறவையின் நிறம் கறுப்பு;

பெண்பறவை பழுப்பான சாம்பல்நிறமுள்ளது. அதன் வாலிலும் பக்கங்களிலும் உள்ள இறகுகள் வெண்மை நிறம் உள்ளன.

**பரீக்ஷைவினு.** எல்லாப் பறவைகளிலும் பெரியது எது? அதன் உயரம் என்ன? அதற்கு வேறென்னபெயர்? அது எங்கே வசிக்கின்றது? அதன் உணவு என்ன? அதன் முட்டையைப்பற்றி என்ன அறிவாய்? நெருப்புக்கோழி எப்படித் தன்னைக் காக்கின்றது? அதனை எதற்காகக் கொல்லுகின்றனர்? எப்படிக் கொல்கின்றனர்?

---

## கக. இஞ்சி.

பாகம் - பகுதி.

இஞ்சி என்பது ஓர்வகைச் செடியின் கிழங்கே. அது ஆசியாவின் தென்கிழக்குப் பாகங்களிலும் சமீபமாயுள்ள தீவுகளிலும் உண்டாக்கப்படுகின்றது. இஞ்சிச் செடியானது செழிப்பான நாணலை அல்லது கோரைப் புல்லைப்போலிருக்கும். அதன் கிழங்கு ஒருபோதும் இல்லாமல் அழிந்துபோவதில்லை. பூமிக்கு மேலிருக்கும் அச்செடியின் தண்டு முதலிய பகுதிகளே வருஷத்துக்கு ஒருமுறை அழிந்து, பின் அக்கிழங்கினின்றும் முளைத்து வளரும். அச்செடியின் வேர் பூமிக்குள்ளே பருத்துக் கிழங்காகின்றது. ஒரு கிழங்கினின்றும் பற்பல கிழங்குகள் கணுக்கணுவாக இணைக்கப்பட்டு உண்டாகின்றன. ஒவ்வொரு கணுவினின்றும் ஒவ்வொரு

முளை தோன்றிச் செடியாய்வளரும். இஞ்சிச்செடி ஏறக் குறைய இரண்டுமுழ உயரமாயும், அகலத்திற் குறைந்து நீண்ட இலைகள் உள்ளதாயும் இருக்கும். தாளிலே பூக் கும். அதன் பூ ஓர்வகை வெண்மை நிறம் உள்ளது.

சித்திரை வைகாசி மாதங்களே இஞ்சி உண்டாக் கப்படுங்காலம். நிலத்தை நன்றாய் உழுது சீர்ப்படுத்தி, பெரும்பாலும் எட்டுமுழ நீளமும் இரண்டுமுழ அகல மும் உள்ள பாத்திகள் ஆக்கி, ஒன்றற்கொன்று சமீ பமாக அளவான குழிகள் தோண்டி, அக்குழிகளிலே எருப்பெய்து நிரப்புவார்கள். பின்பு வெய்யில் படாமல் நிலத்திலே புதைத்து வைத்திருந்த வித்துக்களாகிய கிழங்குகளைப் பெயர்த்தெடுத்து, சிறிய துண்டங்களாக வெட்டி, எருப்பெய்துவைத்த குழிகளிலே நாட்டி, அப் பாத்திகளைப் பச்சிலைத் தளிர்களால் மூடிவிடுவார்கள். இத்தளிர்கள் அவற்றிற்கு எருவுமாகும்; பெருமழை பெய்யும்பொழுது தண்ணீர் அவைகளின்மேல் அதிக மாக விழாமற் காத்தற்கும் உதவும். இஞ்சி முளைப்பத ற்குத் தண்ணீர் வேண்டுமாயினும் அப்பாத்திகளிலே அளவுக்கு மேற்படத் தண்ணீர் நிலைத்து நின்றால் வித் துக்கள் அழுகிப்போகும்; ஆதலினாலே அளவுக்கு மேற் பட்ட தண்ணீர் வாய்க்கால்களால் வடிந்து போகத்தக்க தாகவே பாத்திகள் ஆக்கப்பட்டிருக்கும். செடி முதிர் ந்து தாள்கள் வாடி உலர்ந்துபோகும்போது கிழங்கு கள் அகழ்ந்து எடுக்கப்படும். உலராத இளங் கிழங்கு

இஞ்சியென்றும் நன்ருய் முற்றி உலர்ந்த கிழங்கு சுக்கு என்றும் சொல்லப்படும். வெள்ளைச் சுக்கு, கறுப்புச் சுக்கு, எனச் சுக்கு இரண்டுவகைப்படும். வெந்நீரிலே இட்டுச் சுத்தி செய்யப்படுவதே கறுப்புச் சுக்கு என்றும், நீரினுலே கழுவப்படாமல் மேலே இருக்கும் மண் தேய்த்து எடுக்கப்படுவதே வெள்ளைச் சுக்கு என்றும் சிலர்சொல்லுகின்ருர்கள். வேறுசிலர் அவைகள் இரண்டு வகை இனமான செடிகளின் கிழங்குகள் என்று சொல்லுகின்ருர்கள். கறுப்புச் சுக்கு மஞ்சள் கலந்த சாம்பல் நிறம் உள்ளது. வெள்ளைச் சுக்கு ஓர்வகைமஞ்சள் நிறம் உள்ளது. கறுப்புச் சுக்கைப் பார்க்கினும் வெள்ளைச் சுக்கு அதிகமான காரமும் நல்லமணமும் உள்ளது. பெரும்பாலும் கறுப்புச்சுக்கு வங்காளத்திருந்தும் வெள்ளைச் சுக்கு மலையாளத்திருந்தும் பிற ஊர்களுக்குக் கொண்டுபோகப்படும்.

சுக்காய் முற்றி உலராத இளங்கிழங்காகிய இஞ்சி ஊறுகாய் முதலியனவாக்கி உண்ணப்படுகின்றது. உணவைச் சீரணம் ஆக்குதற்கு அதுபோற் பிறிதொன்று உதவாது. இஞ்சிச் சாறு மருந்தாக உபயோகப்படுகின்றது. அது, வாதம் இருமல் சோகை வயிற்றுவலி சுரம் வாந்தி சன்னி மாந்தம் சூலை முதலிய பலவிதநோய்களை நீக்குந்தன்மையை யுடையதென்று சொல்லப்படுகின்றது. சுக்கும் இவ்விதமான அநேகம் பிணிகளை நீக்க வல்லது. இஞ்சியை வறுத்து எடுத்த சாறு மலத்தைக் கழியாது தடுக்கும்; வறுத்தவியாது எடுத்த சாறு மலத்

தைக் கழியப்பண்ணும். இந்தியவைத்தியர்கள் பெரும் பாலும் அநேகம் மருந்துகளுக்கு இஞ்சிச் சாற்றை அநு பானமாக உபயோகப் படுத்துகின்றனர்.

**பரீக்ஷவினா.** இஞ்சியாவது யாது? அது எங்கே உள் ளது? அச்செடி எதைப்போலிருக்கும்? இஞ்சிக்கிழங்கு எப்படி உண்டாகின்றது? அதை உண்டாக்கும் விதம் எப்படி? சுக்கு என்பது யாது? அதைப்பற்றி என்ன அறிவாய்? இஞ்சியின் பிரயோசனம் என்ன?

---

## கஉ. இராமாயணச் சரித்திரம். 11.

மிதிலையிலே விசுவாமித்திர முனிவரையும் இராச குமாரர்களையும் சனகமகாராசன் கண்டமாத்திரத்தே அவர்களுக்கு மிக்க உபசாரஞ் செய்தான். சனகமகாரா சனுடைய அரண்மனையிலே அவ்வரசனது முன்னோ கிய தேவராதன் என்பவனுக்குக் கடவுளாற்கொடுக்கப் பட்ட மிகப் பெரிய வலிய வில்லொன்றிருந்தது. சனகன் அவ்வில்லின் வலிமையை நோக்கி ,,இவ்வில்லை எடுத்து வளைப்பவர்க்கே என்மகள் உரியவள்,, என வெளிப்படு த்தி முரசறைவித்தான். அது கேட்டுப் பல அரசர் சீதையை விவாகஞ் செய்துகொள்ளும் ஆசையோடு மிதிலைக்குப்போய் அவ்வில்லை அசைக்க முடியாமல் நாணிப் போய்விட்டனர். அதனை அறிந்திருந்த விசுவா மித்திரர், வில்லை வளைத்தற்கு வல்லவர் இராமசுவாமியே யென்று நிச்சயித்தே அவரை அங்கே அழைத்துச் சென்றனர்.

அப்போது விசுவாமித்திரர் சனகனைநோக்கி "இவ்விராசகுமாரர்கள் அயோத்தி நகரத்தரசனாகிய தசரத மகாராசனுடைய சற்புத்திரர்கள். இவர்களுள் இராமசுவாமி, வில்லை வளைத்தவரே சீதையை மணத்தற்குரியர், என நீர் வெளிப்படுத்தியதைக் கேள்வியுற்று அவ்வில்லைக் காணவந்தனர்'' என்றார். உடனே அவ்வில்லானது இராசசபைக்குக் கொண்டுவரப்பட்டது. சனகனுடைய அநுமதிபெற்று இராமசுவாமி அவ்வில்லை மிக எளிதாகக் கையிலெடுத்து நாணேற்றும்படி வளைத்து இரண்டாக முரித்தெறிந்தார். அதுகண்ட சனகமகாராசனும் ஏனையோரும் ஆனந்தமாயினர்.

உடனே அவ்விராசகுமாருடைய தந்தை தாயாரும் உறவினரும் ஏனையோரும் மிதிலைக்கு அழைக்கப்பட்டனர். ஒரு சுப முகூர்த்தத்திலே இராமசுவாமி சீதையை விவாகஞ் செய்துகொண்டனர். அம்முகூர்த்தத்திலேயே சனகனுடைய மற்றொரு மகளாகிய ஊர்மிளையை இலக்குமணரும் சனகனுடைய தம்பியின்மக்களாய மாண்டவி, சுருதிகீர்த்தி என்னும் இருவரையும் முறையே பரதனும் சத்துருக்கனும் விவாகஞ் செய்துகொடனர்.

பரீக்ஷவினா. இச்சரித்திரத்தைச் சொல்லு.

---

## ௧௩. தெய்வபக்தி.

சௌக்கியம் - சுகம். [வும். பற்று - ஆசை.
மரணபரியந்தம் - இறக்குமள கானற்சலம் - பேய்த்தேர்.

தெய்வ பக்தியாவது கடவுளிடத்தே வைக்கும் மேலான விருப்பமேயாம். உலகத்திலே மனிதர்கள் சில பொருள்களிலே அற்பமான விருப்பமும் சில பொருள்களிலே அதிகமான விருப்பமும் உடையவர்களாய் இருக்கின்றார்கள். எல்லாப் பொருள்களிலும் ஒரேவிதமான விருப்பம் உடையவர்களாய் இருப்பவர்கள் இல்லை. ஒருவன் தன்னை உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் பார்க்க அதிகமாய் விரும்புகின்றான். அப்படி விரும்பாதவர்கள் மிகச் சிலரினுஞ் சிலரே. அவர்களுட் சிலர் பொன்னை அதிகமாய் விரும்புகின்றனர்; சிலர் மண்ணை அதிகமாய் விரும்புகின்றனர்; சிலர் பெண்ணை அதிகமாய் விரும்புகின்றனர். ஒருவனுக்கு ஒரு பொருளினிடத்தே எவ்வளவு அதிகமான விருப்பம் உண்டாகின்றதோ அவனுக்கு மற்றைப் பொருள்களிடத்தே அவ்வளவு அதிகமான வெறுப்பும் உண்டாகின்றது. பொன்னைச் சம்பாதிக்க வேண்டுமென்று விரும்பிய ஒருவன் எவ்வளவுக்கு அதிகமாய் விரும்புகின்றானோ அவ்வளவுக்கு அதிகமாய் தன்சௌக்கியத்தையும் வெறுக்கின்றான்; பெண்டிர் பிள்ளையையும் வெறுக்கின்றான்; உறவினரையும் வெறுக்கின்றான்; அயலவரையும் வெறுக்கின்றான்; புகழையும்வெறுத்து இகழ்ச்சியானவைகளைச் செய்கின்

ருன்; புண்ணியங்களையும் வெறுத்துப் படிப்படியே பழி பாவங்களையுஞ் செய்கின்றான். இவ்விதமாய் அநேகர் இருப்பதை நாம் காணவில்லையா? இப்படியே மண் முதலியவைகளிலே அதிகமான விருப்பம் வைப்பவர்கள் எல்லாரும் இறுதியிலே பெரும் பழிபாவங்களையெல்லாம் செய்பவர் ஆகின்றனர். ஆகவே இவ்விதமான ஒரு பொருளிலே அதிகமான விருப்பம்வைத்தவன் மரணபரியந்தம் பெருந் துன்பத்துக்கு ஆளாய்க் கெடுவதை நாம் காண்கின்றோம். இறந்தபின்னும் அப்பற்று நீங்காமையாலும் பழி பாவங்களைச் செய்தமையாலும் பெருந் துன்பத்தை அநுபவிப்பான் என்பதற்குச் சிறிதுஞ் சந்தேகமே இல்லை. இது பற்றியன்றே உலகமானது கானற்சலத்துக்கு ஒப்பிடப்படுகின்றது. தாகத்தையுடையவனொருவன் கானற் சலத்தைக் கண்ட மாத்திரத்தே தண்ணீர் சமீபத்துளது என்று ஆனந்தத்தை அடைகின்றான். மொண்டு உண்ணுதற்கு அதனை நோக்கிச் செல்லச் செல்லச் சமீபத்திலே உள்ளதுபோலத் தோன்றி முடிவிலே மறைந்து போதலால், பின்பு பெருந் துன்பத்தை அடைகின்றான். அதுபோல உலகத்திலேயுள்ள பொருள்களெல்லாம் தொடக்கத்திலே இன்பத்தைத் தருவனபோலத் தோன்றி, முடிவிலே பெருந் துன்பத்துக்கு ஏதுவாகின்றன. அவைகளெல்லாம்துன்பமயமாயுள்ளன. துன்பத்தை அடைய ஒருவரும் விரும்பார். அறியாமையினாலே கானற் சலத்தை உண்ணுதற்குரிய நீரென்று எண்ணினவர்போல, மனிதர் உலகப்

பொருள்களை இன்பத்துக்குரியன என்று எண்ணிக் கெடுகின்றனர். கடவுள் ஒருவரே இன்பத்துக்கு உரியவர். அவர் ஆனந்தமே வடிவமாய் உள்ளவர். அவரை விரும்பினால், அதுவே உண்மையான இன்பத்தைத் தரும். எவ்வளவுக்கு ஒருவன் கடவுளை விரும்புகின்றானோ அவ்வளவுக்கு அவனறிவு கடவுளிடத்தே செல்ல, உலகப் பொருள்களிலே அவனுக்கு மனம் செல்லாது அவைகளிலே வெறுப்பு உண்டாகும். பின்னை அவைகளால் வருந் துன்பம் ஒன்றும் அவனுக்கு இல்லையாகும். முடிவிலே அந்தத் தெய்வபக்தியினாலே அவன் பேரானந்தத்தை அடைவான். தெய்வபக்தி இளமைப்பருவத்திலேயே ஒருவனிடத்தே உண்டாதல் வேண்டும். அப்பொழுதே அவன் அதைக் கற்றுக்கொண்டால், அக்கல்வி அவனை ஒருபோதும் விட்டு நீங்காது மேலும் மேலும் வளரும். இதனை அறிந்தே நம் முன்னோர் தம் பிள்ளைகளுக்கு வித்தியாசாலைகளிலேயே தெய்வபக்தியைக் கற்பித்தனர். இப்பொழுது நம்மவர் இதனைச் சிந்தியாது தம் பிள்ளைகளுந் தாமுங் கெடுவாராயினர்.

**பரீக்ஷைவினா.** தெய்வ பக்தியாவது யாது? உலகப் பொருள்களிலே மனிதர் எப்படி விருப்பம் வைக்கிறார்கள்? ஒருவன் எதை மேலாக விரும்புகின்றான்? சிலர் எதை அதிகமாக விரும்புகின்றார்? சிலர் எதை அதிகமாக விரும்புகிறார்? சிலர் எதை அதிகமாக விரும்புகின்றார். ஒருவனுக்கு ஒரு பொருளிடத்தே எவ்வளவுக்கு அதிகமான விருப்பம் உண்டாகின்றதோ அவ்வளவுக்கு மற்றைப் பொருள்களிலே வெறுப்பு உண்

டாரும் என்பதைவிளக்கிக்காட்டு. உலகப் பொருள்களிலே பற்று வைப்பதால் வரும் பயன் என்ன? உலகம் எதற்கு ஒப்பிடப்படுகின்றது? ஏன்? ஆதலால் நாம் எங்கே பற்றுவைத்தல் வேண்டும்? கடவுளிடத்தே பத்தி உடையவனுக்குத் துன்பம் இல்லை என்பதை விளக்கிக் காட்டுக.

---

## ௧௪. கெட்ட நாற்றம். 1.

| | |
|---|---|
| ஆன்மா - உயிர். | இரசம் - சுவைத்தறியும் அறிவு. |
| நிகழ்வன - சம்பவிப்பன. | கந்தம் - மணம். |
| பரிசம் - தொட்டறியும் அறிவு. | உருவம் - வடிவம். |

நமது சரீரம், ஆன்மா என்று சொல்லப்படுவதாகிய நாம் இருக்கும் வீடேயாம். நாம் இந்தச் சரீரமாகிய வீட்டினுள்ளிருந்து இதையும் இதற்குப் புறத்தே இருப்பனவற்றையும் நிகழ்வனவற்றையும் ஐந்து வாயில்களினால் அறிகின்றோம். அவ்வைந்து வாயில்களாவன:—செவி தோல் கண் நாக்கு மூக்கு என்னும் இவைகளேயாம். இவைகள் ஐந்துபொறிகள் என்று சொல்லப்படும். இவ்வைம்பொறிகளாலும் நாம் அறியும் அறிவும் ஐந்துவிதமாம். செவியினாலே சத்த அறிவையும், தோலினாலே பரிச அறிவையும், கண்ணினாலே உருவ அறிவையும், நாக்கினாலே இரச அறிவையும், மூக்கினாலே கந்த அறிவையும், நாம் பெறுகின்றோம். சத்தம் பரிசம் உருவம் இரசம் கந்தம் என்னும் இவ்வைந்தும் ஐம்புலன் என்று சொல்லப்படும்.

நாம் செவியினாலே நல்ல சத்தங்களைக் கேட்கவிரு ம்புகின்றோம்; கெட்ட சத்தங்களை வெறுத்துவிடுகின் றோம். பரிசம் உருவம் இரசம் கந்தம் என்னும் இவைக ளுள்ளும் நல்ல பரிசம் முதலியவற்றை விரும்புகின் றோம்; கெட்டவற்றை வெறுக்கின்றோம்.

இவ்வைம்பொறிகளுள் மூக்குப்போல நமக்குத் தீங்கு வராமற் காக்கும்படி அறிவுறுத்த வல்லபொறி பிறிதொன்றில்லை. நமது சரீரத்துக்குப் பெருந்தீங்கு விளைக்கும் கெட்ட நாற்றங்களை நாம் அகற்றிவிடும்படி நமக்கு அறிவுறுத்துவது மூக்கே. கெட்ட நாற்றங்கள் நம்மைக் கொல்ல வல்லனவென்பதை உள்ளபடி அநேகர் அறியாதவர்களாய் இருக்கின்றார்கள்.

**பரீக்ஷவினா.** இந்தச் சரீரம் எப்படிப்பட்டதாய் இருக் கின்றது? இவ் வீட்டினுள்ளிருக்கும் நாம் எவற்றை அறிகின் றோம்? எத்தனைவழிகளால் அறிகின்றோம்? ஐந்துபொறிகள் எவை? ஐம்புலன்கள் எவை? நாம் எவற்றை விரும்புகின்றோம்? எவற்றை வெறுக்கின்றோம்? இவ்வைம்பொறிகளுள் எது விசே டமானது?

---

## கரு. கெட்ட நாற்றம். 11.

உயிர்த்தல் - சுவாசித்தல்.
கண்ணாடி - கண்ணுக்கு உப [யோகப்படும் ஆடி.
தாவரம் - மரம் முதலிய ஓர [றிவுப் பொருள்.
விரைவு - சீக்கிரம்.
வஸ்து - பொருள்.
வாயு - காற்று.
அருந்துதல் - உண்ணல்.
தகித்தல் - எரித்துவிடுதல்.

நாம் உயிர்க்கும்போது உட்கொள்ளுங் காற்ற னது சரீரத்தினுள்ளே யுள்ள அழுக்கைப் பற்றிக்கொ ண்டு மூக்கு வாய் கண் என்னும் இவைகளின் வழியாய் வெளியே வருகின்றது. வெளியே வரும் அக்காற்று நீர் நஞ்சு என்னும் இவற்ரோடு கலந்ததாய் வரும். ஒரு குளிர்ந்த கண்ணுடியில் நாம் உயிர்த்துவிட்டால் அவ்வு யிர்ப்பிலேயுள்ள நீரைக் காணலாம். அந்நீர் சரீரத்தி னுள்ள அக்கினியினுல் நீராவியாகி உயிர்ப்போடு வருகி ன்றது. கதவு அடைத்து மூடப்பட்ட ஒரு சிறுமண்ட பத்தினுள்ளே சிலரை இரண்டொருநாள் பூட்டி வைத் திருந்தால், சுத்தமானகாற்று இல்லாமையினுலே தம்மு யிர்ப்போடு வந்த நச்சுக்காற்றை மேலும் மேலும் உட் கொண்டு அவர்கள் விரைவிலே இறந்து கிடப்பதைக் காணலாம். ஆதலினுலே நாம் உட்கொள்ளுங் காற்றுச் சிறிதும் நச்சுத்தன்மை இல்லாததாய் இருத்தல்வேண் டும். கெட்ட நாற்றங்களெல்லாம் நச்சுத்தன்மை யுடை யன ஆதலின் அவற்றை நாம் உட்கொள்ளுதல் ஆகாது. அழுகிக்கிடக்கும் தாவரவஸ்துக்கள், நிலையாய்நின்று பழுதாகும் நீர், இறந்த மிருகம் முதலியவற்றின் சரீரம், மனிதரின் மலம் முதலிய இவைகளெல்லாம் கெட்ட நாற்றங்களைத் தருவன. அவற்றிலுள்ள நஞ்சு வாயுவிற் கலந்துவிடுகின்றது. வாயுவோடு கலந்திருக்கும் அக்கினி யினுலே அது எரிக்கப்பட்டுச் சுத்தமாதற்குமுன் நாம் அதை உயிர்ப்பின் வழியாய் அதிகமாக உட்கொண்டால் வாயினுல் நஞ்சருந்தி இறப்பவர்கள்போல இறந்துவிடு

வோம் என்பதற்குச் சிறிதுஞ் சந்தேகமில்லை. நஞ்சான கெட்ட நாற்றமுள்ள வாயுவை உட்கொள்ளுதலால ன்றோ பேதி முதலிய நோய்கள் உண்டாகின்றன.

அதி சமீபத்திலே தோன்றும் பெரிய கெட்டநாற் றங்களையே மூக்கு நமக்கறிவிக்க வல்லது. அந்நாற்றம் சிறிது தூரத்துக்கு வாயுவோடு கலந்து சென்றபின் மூக்கு அதனை அறிய வல்லதன்று. ஆதலினாலே நாம் அறியாவண்ணம் உட்சென்று நம்மைக் கொல்ல வல்ல நஞ்சுள்ள கெட்ட நாற்றம் வருதற்கேதுவாயின எவற் றையும் கண்டமாத்திரத்தே அக்கினியினாலே தகித்துச் சுத்தப்படுத்துதல் அல்லது காற்றோடு கலவாவண்ணம் நிலத்திலே புதைத்து விடுதல் நமது பெருங்கடனாம்.

**பரீக்ஷவினா.** நாம் உட்கொள்ளுங் காற்று எவ்வித மாய் வெளியே வருகின்றது? அது, நீர் நஞ்சு என்னும் இவற் றோடு கலந்து வருகின்றது என்பதை எப்படிப் பரீக்ஷித்து அறியலாம்? ஆதலினாலே நாம் என்ன செய்யவேண்டும்? நச்சு க்காற்று வருதற்கு ஏதுக்கள் எவை? நாம் என்ன செய்யவே ண்டியது?

---

## ௧௬. விவேகமுள்ள நீதிபதி. 1.

நியோகித்தல் - ஏவுதல், நியமித்தல்.
வேஷம் - கோலம்.
நீதிபதி - நியாயத்தலைவன்.
சீலம் - நல்லொழுக்கம்.
பிரார்த்தித்தல்-வேண்டிக்கொள்ளல்.
தயாளம் - கிருபை.

முன்னொரு காலத்திலே திருவனந்த புரத்தை அரசாண்டிருந்த ஒரு அரசன் தன் தேசத்தைப் பல கூறுகளாக்கி ஒவ்வொரு கூற்றிலும் நீதி செலுத்தும்படி பல நீதிபதிகளை நியோகித்திருந்தான். அப் பல நீதிபதிகளுள்ளும் ஒருவன் மிகுந்த விவேகமாய் நீதிசெலுத்தி வருகின்றான் என்று கேள்வியுற்று, அரசன் தானே அதனைப் பரீக்ஷித்தறிய விரும்பி வேஷம் மாறி ஒரு குதிரையில் ஏறி அவ்வூர்க்குச் சென்றான்.

செல்லும்போது அந்த நீதிபதி நீதிசெலுத்திய நகரத்தின் வாயிலிலே இருந்த முடவன் தனக்குப் பிக்ஷை கொடுக்க வேண்டுமென்று அரசனை வேண்டினான். அரசன் தன் பணப்பையை அவிழ்த்துப் பிக்ஷை கொடுத்தான். முடவன் பிக்ஷையை ஏற்றுக்கொண்டு பின்னும் அரசனை நோக்கி "புண்ணிய புருஷரே! உம்மைப்போலத் தருமசீலமும் தயாள குணமும் உள்ளவர் பிறர் இல்லை. நீர்செய்த பரோபகாரத்துக்குக் கைம்மாறில்லை. இற்றைத் தினம் இவ்வூர்ச்சந்தைத் தினம் ஆகலின், மனிதன் வாகனம் பண்டி முதலியவைகளுக்குத் தப்பித் தமியேன் சந்தையையடைந்து அங்கே வந்தவர்களிடத்துப் பிக்ஷயேற்று உய்யும்படி துணைசெய்வீரேல் தக்க பலனைத் தப்பாது பெறுவீர்" என்று பிரார்த்தித்தான். அப்போது அரசன் முடவனை நோக்கி "அதற்குச் செய்யத்தக்கது யாது" என்று வினவினான். "என்னையும் உமக்குப் பின்புறத்தே குதிரையின்மீது

ஏற்றிச் செல்வதே" என்று முடவன் கூறினான். "அப்படியே ஆகுக" என்று சொல்லி அரசன் முடவனைக் குதிரைமீதேற்றிச் சென்றான்.

சந்தையைச் சமீபித்தவுடனே "பிக்ஷையை ஏற்றற்குத் தகுந்த இடம் இதுவேயாகலின் குதிரையினின்றும் இறங்குக" என்று அரசன் கூறினான். "யான் ஏறி வந்த குதிரை எனதேயாகலின் நீயேயிறங்கிச் செல். இது நடுவுநிலைமை சிறிதுந் தவறாத நீதிபதி இருந்து நீதி செலுத்தும் நகரம் என்றறியாய் கொல்லோ? யான் முடவன் ஆகலின், நடத்தற்குக் கால் இல்லாத எனக்கா, அல்லது காலுள்ள உனக்கா, குதிரை வேண்டும் என்பது நீதிபதி நிச்சயித்து விடுதற்கு அரியதோர் விஷயமாகுமா? வீணாய்க் காலதாமதஞ் செய்யாது உன்வீட்டுக்கு விரைந்துசெல்" என்று முடவன் கூறினான். "யான் செய்த பரோபகாரத்துக்குத் தக்க பலன் இஃதேயோ" என்று சொல்லி, அரசன் நீதிபதியின் நீதித் திறத்தை அறிதற்கு இதுவே வழியாம் என்னும் எண்ணத்தோடு வழக்குத் தீர்ப்புக்குச் செல்ல உடன்பட்டான். இருவரும் நீதிபதியிடஞ் சென்றார்கள்.

**பரீக்ஷவினா.** விவேகமுள்ள நீதிபதியின் சரித்திரத்தைச் சொல்லு.

---

## களஎ. விவேகமுள்ள நீதிபதி. 11.

| | |
|---|---|
| வாணிகன் - வியாபாரஞ் செய் | தீர்ப்பு - முடிவு. |
| பண்டிதன்-வித்துவான்.[வோன். | கைவந்தவள் - பழகினவள். |
| மௌனம் - பேசாதிருத்தல். | பணி - ஏவல், கட்டளை. |

அற்றைத்தினம் வேறும் இருவழக்குக்கள் தீர்ப்புச் செய்யப்படவேண்டி யிருந்தன. முதலாம் வழக்கு ஒரு பண்டிதனுடைய மனைவியைப் பற்றியது. அவளைப் பயிரிடுந் தொழில் செய்வானொருவன் தன்மனைவியென்று சொல்லியதே வழக்காம். இரண்டாம்வழக்கு ஒரு இறைச்சி விற்பவனுடைய பணத்தைப்பற்றியது. எண்ணெய் வாணிகனொருவன் அதைத்தன்பணம் என்று சொல்லியதே வழக்குக்குக் காரணமாயது.

பண்டிதனுடைய மனைவி ஒருபக்கத்துஞ் சாராது மௌனமாய் இருந்தபடியாலும் இருவர்பக்கத்துக்கும் சாக்ஷி சொல்வார் இருந்தமையாலும் உள்ளபடி அறிந்து தீர்ப்புச்செய்தல் பிரயாசமாயிற்று. நீதிபதி அப்பெண்ணைப் பண்டிதனுடைய மனைவியென்றும், அப்பணத்தை இறைச்சிக்கார னுடையதென்றும் தீர்ப்புச்செய்து விட்டான். பின்பு அவன் அரசனையும் முடவனையும் நோக்கி, இருபது குதிரைகளுக்கிடையே நிற்கும் உங்கள் குதிரையை நிச்சயித்துக் காட்டிவிடுங்கள் என்று தனித் தனியே ஏவினான். அவ்தாணித்தலிலே மிகுந்த சாமர்த்தியம் உடையவனாகலின் அரசனைப்போலவே முடவ

னும் அந்தக் குதிரையையே சுட்டிக் காட்டி விட்டான். ஆயினும் குதிரை அரசனுடையதென்றே தீர்ப்புச் செய்யப்பட்டது.

பின்பு அரசன் நீதிபதியின் வீட்டுக்குச் சென்று, தான் அரசன் என்பதையும் தான் அவ்விடத்திற்கு வந்ததற்குக் காரணம் இன்னது என்பதையும் அறிவித்து, இம் மூன்று வழக்குக்களிலும் உண்மையைக் கண்டு கொள்ள ஏதுவாயின யாவை என்று வினவினான்.

"மகாராசனே! நான் எனது மசிக்கூட்டிலே புதிதாக மசி ஊற்றிக்கொண்டு வரும்படி சொல்லியபோது அப் பெண் பலமுறை செய்து கைவந்தவள்போல அப்பணியைச் செய்து முடித்தமையாலும், இன்னும் இதுபோன்ற வேறு பரீக்ஷைகளாலும் அவள் பண்டிதனுடைய மனைவியென்று நிச்சயித்தேன். சென்று போன இரவு முழுதும் இறைச்சிக்காரனுடைய அப்பணத்தைத் தண்ணீரிலிட்டு வைத்திருந்து விடியற்காலத்திலே பார்த்தபோது அத்தண்ணீரிலே எண்ணெய்ப்பற்றுச் சிறிதும் இல்லாமையாலும், புலால் நாற்றம் உடையதாய் இருந்தமையாலும் அதனை இறைச்சிக்காரனுடையதென்றே நிச்சயித்தேன். மகாராசனே! தங்களைக் கண்டமாத்திரத்தே இக்குதிரை சந்தோஷமாய்க் கனைத்தமையாலும், முடவனுடைய வேற்று முகத்தைக் கண்டு பழக்கமில்லாமையால் வெருண்டமையாலும் இதனைத் தங்களுடையதென்றே நிச்சயித்தேன்" என்று நீதிபதி கூறினான்.

**பரீக்ஷவினா.** விவேகமுள்ள நீதிபதியின் சரித்திரத்தைச் சொல்லு.

---

## கஅ. மி ள கு.

நாறு - முளை. [கோல்.
கொளுகொம்பு - ஆதரவான
தாங்கல் - தரித்தல். [செய்தல்.
உலர்த்தல் - காய்ந்துபோகச்
உதிர்தல் - சொரிதல்.
ஆரோக்கியம் - சௌக்கியம்.
சுரம் - காய்ச்சல்.
தாகம் - நீர் விருப்பம்.

மிளகானது வெற்றிலைக் கொடிபோன்ற ஓர்வகைக் கொடியின் வித்தே. மிளகுக்கொடி கறுப்புநிறம் உள்ளதாய் இருக்கும். மிளகுக் கொடிகளை நாற்றிட்டுச் சிறு கன்றுகளாயபின் பெயர்த்தெடுத்து வைப்பார்கள். அது கொளுகொம்பின் வழியாய்ப் பெரிய மரங்களில் ஏறி அதிகம் உயரத்திலே அம்மரக் கொம்பர்களிலே சுற்றிச் சுற்றிப் படர்ந்து வளரும். நாலுவருஷங்களின் பின் அக்கொடிகளின் கணுக்களிலே கருமையான பூக்கள் கதிர்போலத் தோன்றும். பின்பு அப்பூக்களெல்லாம் காய்களாய்க் குலைகுலையாய்க் கீழே தூங்கும். அவற்றின் சுமையைத் தாங்கமாட்டாமல் மரக் கொம்பர்களெல்லாம் கீழே வளைந்துவிடும். வெய்யிலில் உலர்த்தப்பட்ட இக்காய்களே மிளகுகளாம்.

மிளகுக்கொடி விசேஷமான பலனைக் கொடுப்பது எட்டாம் வருஷத்திலேயே. பின்பு வரவரப் பலன் குறைந்து மூன்று நாலு வருஷங்களுக்குமேல் அழிந்து போகும். இக்கொடி ஒருவருஷத்திலே இரண்டுமுறை பலன்கொடுக்கும். கொடி செழிப்பாயிருந்தாற் பலனும் அதிகமாயிருக்கும். ஒவ்வொரு குலையிலும் இருபது

முப்பது காய்கள் இருக்கும். மிளகின் காய்கள் நன்றாய் முற்றாமல் பச்சையா யிருக்கும்போதே பறித்து வெய்யிலிலே காயப்போடுவார்கள். அப்படிச் செய்தாற்றான் அவைகளுக்குக் கறுப்புநிறம் உண்டாகும். பச்சையா யிருக்கும்பொழுது பறித்திடாமல் நன்றாய் முற்றும் வரையும் விட்டிருந்தால் மிளகின்நிறம் வெண்மையாகும். கறுப்புமிளகு வெள்ளைமிளகு என்னும் இரண்டும் ஒரே கொடியில் உண்டாகும். கறுப்புமிளகைத் தண்ணீரில் ஊறவிட்டு மேலுள்ள கறுப்புத் தோலைத் தேய்த்துவிட்டால் அது சாம்பல்போன்ற வெண்ணிறம் உள்ளதாகும். கொடியினின்றும் உதிர்ந்து வீழ்ந்த இளங்காய்களாகிய மிளகு அதிகமாகச் சுருங்கியிருக்கும். அவற்றையும் வெய்யிலிலும் காற்றிலும் வைத்துலர்த்தி மேலுள்ள தோலைப் போக்கி வெண்மையாக்குவதும் உண்டு.

இந்தியாவிலும் அதற்குச் சமீபமாயுள்ள தீவுகளிலும் மிளகு உண்டாக்கப்படுகின்றது. மலையாளத்து மிளகே அதிகஞ் சிறந்தது. அங்கே பலாமரங்களின்மேலேயே மிளகுக் கொடிகளைப் படரவிடுவார்கள். மிளகுக் கொடிகள் படருகின்றதினால் பலாப்பழங்கள் உருவத்திற் சிறியவாகின்றன வென்றும் அப்பழங்களிலும் மிளகின்காரம் தோன்றுகிறதென்றும் சொல்லுகிறார்கள்.

சில ஊர்களிலுள்ள காடுகளிலே மிளகுக்கொடிகள் தாமே முளைத்து வளருகின்றன. பூமியிலே படருங்

கொடி வேருன்றப் புதிய கொடிபோல அது மீளச் செழிப்பாய் வளர்கின்றது. படருதற்கு ஆதாரமில்லாவிட்டால் அது மேலே ஏறமாட்டாது; அதன்பலனும் குறைவாயே இருக்கும். அவ்விடங்களிலே காற்றும் வெய்யிலும் கொடிகளின்மேல் நன்றாய்ப் படும்படி அவைகளை மூடியிருக்கும் இலை தளிர் முதலியவைகளைக் கொய்து விடுவார்கள். காற்றும் வெய்யிலும் அக்கொடிகளின் மேல் நன்றாய்ப் படாவிட்டால் அவைகளின் பலன் மிகக் குறைவாகும். இலங்கையிலும் காடுகளிலே தானே முளைத்து வளரும் மிளகு அதிகமாய் உண்டு.

உணவுப் பதார்த்தங்களோடு மிளகை அளவாகச் சேர்த்து உண்பது சரீரத்துக்கு ஆரோக்கியத்தைத் தரும். அளவுக்கு மேற்பட உபயோகித்தால் ஈரலில் எரிவு உண்டாம். மிளகு அதிகங் காரமும் வெப்பமும் உள்ளது. அது, சோகை சுரம் சூலை கபம் தாகம் மாந்தம் வயிற்று வாயு கிருமி முதலிய நோய்களை நீக்குதற்கு நல்ல மருந்தாம்.

**பரீக்ஷவினு.** மிளகாவது என்ன? அக்கொடியின் நிறம் என்ன? அதை உண்டாக்குவது எப்படி? எப்பொழுது பூக்கள் தோன்றும்? அவற்றினிறம் என்ன? காய்கள் எப்படி இருக்கும்? அது எப்பொழுது விசேஷமான பலனைக் கொடுக்கும்? இக்கொடியைப்பற்றி அறிந்தவற்றை ஒவ்வொன்ருகச் சொல்லுக. மிளகுவித்தை எடுப்பது எப்படி? எங்கே மிளகு உண்டாக்கப் படுகின்றது? எப்படி உண்டாக்கப்படுகின்றது? சில ஊர்களிலே மிளகுக் கொடிகள் எப்படி வளர்கின்றன? மிளகின் பிரயோசனம் என்ன?

---

## கக. இராமாயணச் சரித்திரம். 111.

சூரன் - வீரன்.
க்ஷத்திரியகுலம் - அரசவம்மிசம்
நிர்மூலமாக்கல்—மூலம் இல்லா மற்செய்தல், முற்றுயழித்தல்.
பொரல் - போர்செய்தல்.
ஆனந்தம் - பெருமகிழ்ச்சி.
அரக்கி - இராக்கதப்பெண்.
பட்டாபிஷேகம் - முடிசூட்டல்.

பின்பு தசரதமகாராசன் தன் மக்களையும் மருமக்களையும் அயோத்திக்கு அழைத்துச் சென்றார். செல்லும்போது வழியிலே க்ஷத்திரிய குலத்துக்குப் பகைவரான பரசுராமர் எதிரே வந்தார். அவருடையதந்தையாரை ஓரரசன் கொலைசெய்தமையால் அரசர்குலத்தை நிர்மூலமாக்கிவிட ஆரம்பித்துப் பரசுராமர் அநேகம் அரசரைக் கொன்றனர். தசரதர் மிக வயோதிகரானமையாலும் நெடுநாளாக மக்கட்பேறின்றி இருந்தமையாலும் இதுகாறும் யாதொரு துன்பமுஞ் செய்யாதிருந்தனர். இப்போது அவருக்கு நான்கு புத்திரர் பிறந்ததும், அவர்களுள்ளே இராமசுவாமி விசுவாமித்திரருடைய யாகத்திலே தாடகை என்னும் கொடிய அரக்கியைக் கொன்றதும், சனகனிடத் திருந்த வலிய வில்லை முரித்துச் சீதையை விவாகஞ் செய்துகொண்டதும், பிறவும் கேள்வியுற்று மிக்க கோபத்தோடு அவர்க்கெதிரே வரலானுர். அதுகண்டு இராமசுவாமி அவர்க் கெதிரேபோய், "இப்பொழுது செய்யவேண்டியது என்ன?" என்று வினுவினுர். இராமசுவாமி அகங்காரத்தோடு பேசியதைக் கேட்டு மனம் பொறுராய்ப் பரசுராமர், "சனகருடைய பழைய வில்லை

முரித்துச்சீதையைக்கொண்டசூரனே! இந்தவில்லைவளைத்து நாணேற்றுக பார்ப்போம்" என்று சொல்லித் தமது கையிலிருந்த ஒரு வில்லைக் கொடுத்தார். இராமசுவாமி அவ்வில்லை மிக எளிதாக வளைத்து நாணேற்றி "இப்பொழுது நீர் என்னுடன் பொர வருகின்றீரா? அல்லது எனக்கு அடிமையாகின்றீரா?" என்று கேட்க, பரசுராமர் அஞ்சித் தாம்செய்த பிழையைப் பொறுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தார். இராமசுவாமி அவர் செய்த பிழையைப் பொறுத்து, இனிமேல் ஒருவரையும் துன்புறுத்தாதிருக்கும்படி கட்டளையிட்டு அனுப்பினுர். இச்செய்கையைக் கண்டு அனைவரும் மகிழ்ச்சி உடையராய் அயோத்தியைச் சேர்ந்து சுகமாயிருந்தனர்.

சிலகாலஞ் சென்றபின்பு தசரதமகாராசன் தமது முதற்புத்திரராகிய இராமசுவாமிக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவிட்டுத் தாம் உலகப்பற்றை யொழிந்து தவஞ் செய்திருத்தல் வேண்டுமென விரும்பினுர். அதுகேட்டு அயோத்திநகரம் மிகுந்த ஆனந்தப்படுவதாயிற்று. அப்போது அரசனுடைய இளைய மனைவி யாகிய கைகேசி தன் மகனுன பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துவிடும்பொருட்டு, இராமசுவாமியைப் பதினுன்கு வருஷம் காட்டிற்கு அனுப்பிவிடவேண்டுமென்று அரசனை உடன்படுத்தினுள். இராமசுவாமி சிறியதாயின் சொல்லுக்கு மாறுக நடக்க உடன்படாதவராய்க் காட்டுக்குப் போகப் புறப்பட்டார். இலக்குமணரும் இராமசுவாமி

இருக்கும் இடமே அயோத்தியென்று அவரைப் பின்ருெடர்ந்து சென்ருர். சீதாதேவியாரும் நாயகரைப் பிரிய விரும்பாமல் உடன்போனுர்.

பரீக்ஷைவிஞ. இப்பாடத்தின் சரித்திரத்தைச் சொல்லு.

---

## உ0. சன்மார்க்கம்.

ஒத்தல் - உடன்படல். சம்பவித்தல் - உண்டாதல்.
பிரயாணம் - யாத்திரை. கீழ்ப்படிதல் - தாழ்தல்.

சன்மார்க்கமாவது நல்வழி. யாவரும் நல்ல வழியிலேயே நடக்கவேண்டும் என்பதை ஒத்துக்கொள்வார்கள். ஒரு ஊரை நோக்கிப் பிரயாணஞ்செய்பவன் நல்லவழியாற் போதற்கே விரும்புகின்ருன். நல்லவழியை விட்டுக் கள்வர் முதலியோர் கல் முள் முதலியன நிறைந்த தீயவழியாற் போதற்கு ஒருபோதும் உடன்படமாட்டான். அந்தத் தீயவழியாற் போனுல் தனக்குத் தீமை சம்பவிக்கும் என்ற அச்சமே அவன் உடன்படாமைக்குக் காரணமாம்.

இப்படியே உலகத்திலே மனிதர் ஒழுகவேண்டிய நல்ல வழிகளும் வெறுத்துவிடவேண்டிய தீயவழிகளும் பல உள. கீழ்ப்படிவு உண்மைபேசுதல் களவுசெய்யாமை வியபிசாரஞ் செய்யாமை முதலியன ஒருவன் ஒழுகவேண்டிய நல்லவழிகளாம்; கீழ்ப்படியாமை முதலியன தீயவழிகளாம். இவ்வுலகத்திலே ஒருவன் தனக்கு மேலா

னவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடத்தல் எப்பொழுதும் நன்மையாகும். அறிந்தவர் வழிகாட்ட அவ்வழி நடப்பதே மனிதரியல்பு. அறிவித்தாலன்றி அறியமாட்டாத குறைவு அவருக்கு இயல்பாயுள்ளது. ஆதலினாலே உலகத்திலே ஒழுகுவார் அறிந்தவருக்குக் கீழ்ப்படிந்து அவர்சொற்படி நடத்தல் வேண்டியது ஆவசியகமே. அப்படி நடவாதார் பெரும்பாலுந் தீயவழியிலேசென்று துன்பத்தை அடைவார்.

ஒரு ஊரை நோக்கிப் பிரயாணஞ் செய்பவன் அறிந்தவரைக் கேட்டு அவர்க்குக் கீழ்ப்படிந்து நல்ல வழியாற் போகாமல் தீயவழியாற் போனால் கள்வர் முதலியோராலும் கல் முள் முதலியவற்றாலும் துன்பத்தை அடைவான் என்பது நிச்சயம். ஆதலினாலே கீழ்ப்படிவு நல்ல வழியாம்; கீழ்ப்படியாமை தீயவழியாம்.

ஒரு பிள்ளையிடத்தே அதிகம் விருப்பம் வைத்திருப்பவர்கள் தந்தைதாயர் உபாத்தியாயர் முதலியவர்களே. அப்படி விருப்பம் வைத்திருக்கும் அவர்கள் அப்பிள்ளைகளுக்கு நல்ல வழியைக் காட்டுவார்களே யன்றி ஒருபோதும் தீயவழியைக் காட்டமாட்டார்கள். ஆதலினாலே பிள்ளைகள் எப்பொழுதும் தந்தைதாயர் உபாத்தியாயர் முதலியவர்களுக்குக் கீழ்ப்படிந்து அவர்சொற்படி நடத்தல் வேண்டும்.

''தந்தைதாயர் உபாத்தியாயர் முதலியோர் தீயவழியிலே ஒழுகுவோராயிருந்தால் பிள்ளைகளுக்குந் தீய

வழியைத்தானே காட்டுவார்கள்; அவர்களுக்கும் கீழ்ப் படியலாமா?" என்றால், "அவர்கள் தீயவழியையே காட்டினார்கள்" என்று பிள்ளைகள் அறியத்தக்க பருவம் வருமளவும் அவர்களுக்குக் கீழ்ப்படிந்தே நடத்தல் வேண்டும். தீயவழியிலே நடக்கும் தந்தைதாயர் முதலியோரும் தம் பிள்ளைகளுக்கு நல்லவழியையே காட்டுதலை நாம் பெரும்பாலுங் காண்கின்றேம். தீயவழியிலே ஒழுகும் தந்தைதாயருடைய பிள்ளைகளையும் நல்லவழியிலே ஒழுகச் செய்பவர்கள் உபாத்தியாயர்களே. இதுபற்றியன்றே உபாத்தியாயர்கள் எப்பொழுதும் சன்மார்க்கராய் இருத்தல் வேண்டும் என்று சொல்வது.

இக்காலத்திலே சில தந்தைதாயர் தம்பிள்ளைகளைச் சில வித்தியாசாலைகளுக்குக் கல்வி கற்பிக்கவிடுதற்கு அஞ்சுகின்றார்கள். தம்மக்கள் அங்கே கல்வி கற்கச்சென்று துர்மார்க்கராய்ப் போதலினும்பார்க்க, கல்லாதிருப்பினும் அது நல்லதேயாமென்று எண்ணுகின்றார்கள். 'சன்மார்க்கத்தைக் கற்றுக் கொள்ளுதற்கு இடமாய் இருக்கவேண்டிய வித்தியாசாலைகளெல்லாம் துர்மார்க்கத்தைக் கற்றுக்கொள்ளுதற்கு இடமாய் இருக்கலாமா?' என்று அறிவுடையோர் வருந்துதற்கு ஏதுவாய் நமது வித்தியாசாலைகள் இருக்கின்றனவே. உபாத்தியாயரும் வித்தியாசாலைகளைத் தாபித்து நடத்துவோரும் இதனைச் சிந்திப்பார்களாக.

நமது ஊரிலே நல்ல வித்தியாசாலைகள் இருப்பின் நம்மவரிற் பெரும்பாலார் சன்மார்க்கராய் இருப்பரே

யன்றித் துர்மார்க்கராகார். இளமையிலே பழகிய பழக்கம் மரணபரியந்தம் விட்டுநீங்காது. இளமையிலே சன்மார்க்கராயினோர் முதுமையிலும் துர்மார்க்கர் கூட்டத்தை வெறுத்துவிடுவார். ஆதலினாலே நம்மவரை இளமையிலேயே நல்வழிப் படுத்திவிடுதற்கேற்ற வித்தியாசாலைகளே வேண்டும்.

பரீக்ஷவினா. சன்மார்க்கமாவது யாது? யாவரும் எதனை ஒத்துக்கொள்வார்? பிரயாணி எதை விரும்புவான்? எதை வெறுப்பான்? ஏன்? இப்படியே உலகத்திலே என்ன உள? என்ன ஒருவனுக்கு நன்மையாகும்? மனிதர் இயல்பு என்ன? ஆதலினாலே என்ன ஆவசியகம்? எது நல்லவழி? எது தீயவழி? ஏன்? ஆருக்குக் கீழ்ப்படிதல்வேண்டும்? ஏன்? தந்தைதாயர் முதலியோர் தீயவராயின் என்ன செய்தல் வேண்டும்? ஏன்? இக்காலத்திலே சில தந்தைதாயர் எதற்கு அஞ்சுகின்றார்கள்? ஏன்? எப்பொழுது நம்மவர் சன்மார்க்கராவர்?

---

## உக. மார்க்கண்டேயர்.

ஆயுள் - வாழ்நாள். கருணை - கிருபை.
புலம்புதல்—தனிமையாய்அழு [தல். ஆளுதல் - அடிமைக்கொள்ளல்.

மிருகண்டுமுனிவர் தமக்கு மக்கட்பேறில்லாமையினாலே மனம் மிக வருந்திக் காசி என்னும் சிவஸ்தலத்தை அடைந்து கங்கையிலே ஸ்நானஞ்செய்து சிவபெருமானை வணங்கித் தவஞ்செய்திருந்தார். ஒருவருஷத்தின்பின் சிவபெருமான் அவர்க்கு முன்பாகத் தோன்றி

யருளி "உனக்கு அவயவக்குறைவும் தீயகுணமும் பூரணமான ஆயுளுமுடைய ஒரு புதல்வன் வேண்டுமா?, அல்லது அவயவநிறைவும் நற்குணமும் நம்மிடத்தன்பும் பதினாறுவயசுமுடைய ஓர் அழகிய புதல்வன்வேண்டுமா?" என்று வினவ, முனிவர் "வயசு பதினாறாயினும் உம்மிடத்தே அன்புள்ள புதல்வனே வேண்டும்"என்றார். அப்போது சிவபெருமான் "நீ வேண்டியபடியே வரந் தந்தோம்" என்று அருளிச்செய்து மறைந்தனர்.

சிலநாட் சென்றபின்பு முனிவருக்கு அவருடைய மனைவியாரது வயிற்றிலே ஒரு பிள்ளை உண்டாகிப் பிறந்தது. அப்பிள்ளைக்கு மார்க்கண்டேயர் என்று பெயரிட்டார்கள். மார்க்கண்டேயர், சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று துணிந்தவராய், அவரைவணங்கி, அவரிடத்தும் அவருடைய அடியாரிடத்தும் மிக்க அன்புடையவராய், கற்றல் விரதங்காத்தல் முதலிய பிரமசரிய ஒழுக்கங்களிலே வழுவாது ஒழுகுவாராயினர்.

மார்க்கண்டேயருக்குப் பதினாறும் வயசு வந்தவுடனே சிவபெருமான் கொடுத்தருளிய வரத்தை நினைந்து தந்தையுந் தாயும் மனம் மிக நொந்து மைந்தனை நோக்கித் தனித்தனியிருந்து புலம்புவாராயினர். மார்க்கண்டேயர் அவர்களைப் பார்த்து, "நீங்கள் ஏன் அழுகின்றீர்கள்?" என்று கேட்க, அவர்கள் சிவபெருமான் கொடுத்தருளிய வரத்தைச் சொல்லி, "இனி நீ இறந்துவிடுவாயென்று அஞ்சி அழுகின்றோம்" என்றார்கள்.

மார்க்கண்டேயர் அவர்களைப் பார்த்து "நீங்கள்பயப்ப டவேண்டாம். நான் சிவபெருமானை வணங்கி யமனை வென்று வருவேன்" என்று சொல்லிவிட்டு, சிவாலய த்தை யடைந்து சுவாமியை வணங்கி, அவ்விடத்தே ஒருபக்கத்திருந்து சிவபூசை செய்து வருவாராயினர். சிவபெருமான் அப்பூசைக்கு மகிழ்ந்து வெளிப்பட்டு, "நீ யமனுக்கு அஞ்சவேண்டாம்" என்று சொல்லி மறைந்தருளினர்.

மார்க்கண்டேயருக்குப் பதினறு வயசு ஆனவு டனே யமன் பயங்கரமான வடிவம் உடையனுய்த் தோ ன்றி அவரை வரும்படி அழைத்தான். மார்க்கண்டேயர் யமனை நோக்கி, "சிவனடியார்கள் இறத்தல் இல்லை. இற ந்தாலும் அவர்கள் சிவலோகத்துக்குப் போவார்களே யன்றி உன்னுடைய யமலோகத்துக்கு வரமாட்டார்கள். ஆகலின் சிவபெருமானுக்கு அடியவனுகிய யான் உன் னுடன் வரமாட்டேன்" என்று சிறிதும் அச்சமின்றிச் சொன்னர். அப்போது யமன் தான் இறக்கவேண்டிய ஊழ் இருந்தமையினுலே சிவனடியார் என்பதைச் சிறி தும் சிந்தியாது "உன்னை ஆண்ட அச் சிவபெருமானு டைய ஏவற்றெழிலையே யானுஞ் செய்கின்றேன்"என்று சொல்லி மார்க்கண்டேயருடைய கழுத்திலே பாசக் கயிற்றைவீசி இழுத்தான். உடனே மார்க்கண்டேயர் தம்மையாண்ட பெருங்கருணைக் கடலாகிய சிவபெரு மானைத் துணைசெய்யும்படி வேண்டினர். அடியார்க்கெ

ளியவராகிய சிவபெருமான் வெளியாய்த்தோன்றியமனை உதைக்க, அவன் வீழ்ந்திறந்தான். அப்போது மார்க்கண்டேயர் சிவபெருமானைத் துதித்து வணங்க, அவர் "உனக்கு முடிவில்லாத ஆயுளைத் தந்தோம்" என்று அருளிச்செய்தனர். மார்க்கண்டேயர் அவ்வரத்தைப் பெற்றுக்கொண்டு போய், அழுதுகொண்டிருந்த தந்தை தாயரை மகிழும்படி செய்தார்.

**பரீக்ஷவினு.** மார்க்கண்டேயருடைய சரித்திரத்தைச் சொல்லு.

---

## ௨௨. தேன்வண்டு. 1.

சோலை - மரச்செறிவு. வேலை - தொழில்.
இனிமை - இன்பம். சிறை - இறகு.
சோம்பல் - தூங்கல். மண்டபம் - மாடம்.

ஒரு பூவிலிருந்து மற்றொரு பூவுக்குப் பறந்துதிரிகிற மிக்க முயற்சியான தேன்வண்டுகளை நீ எப்போதாவது பார்த்ததுண்டா? சோலைகளிலே அவைகள் பாடுவதைக் கேட்டால் மிக இனிமையாயிருக்கும். அங்கே தனிமையான இடங்களிலே அவைகள் கட்டியிருக்கும் கூட்டைப் பார்த்தால் மிக நூதனமா யிருக்கும்.

தேன்வண்டு கருவண்டு பொன்வண்டு பொறிவண்டென வண்டுகள் பலவகைப்படும். அவற்றினுள்ளே தேன்வண்டு மிகச் சிறிய வடிவமுடையது. அதைத் தேனீயென்று சொல்லுவது வழக்கம். ஒருகூட்டிலே

அநேகம் தேன்வண்டுகள் வசிக்கும். அவையெல்லாம், தாய்வண்டும் சோம்பலாயிருக்கும் வண்டுகளும் வேலை செய்யும் வண்டுகளுமென மூன்று விதமானவைகளா யிருக்கும்.

தாய்வண்டு மற்றை வண்டுகளினும்பார்க்க மிகப் பெரியதும் எல்லாவற்றிற்கும் தலைமையானதுமா யிருக்கும். அதன்சொற்படியே மற்றை வண்டுகள் நடக்கும். இந்தத் தாய்வண்டே முட்டையிட்டு மற்றை வண்டுகளை உண்டாக்குகின்றது. அது யாதொரு வேலையுஞ் செய்வதில்லை.

சோம்பலாயிருக்கும் வண்டுகள் ஒரு கூட்டிலே அநேகம் உண்டு. அவைகள் அங்கும் இங்கும் பறந்து பாடிக்கொண்டு திரியும். அவைகளைப் பார்த்தால் ஓழிவின்றி வேலைசெய்வனபோற் காணப்படும்; ஆயினும் அவைகள் யாதொரு வேலையுஞ் செய்வதில்லையென்பது நிச்சயம்.

அச்சோம்பலா யிருக்கும் வண்டுகளைக் காட்டினும் ஒரு கூட்டிலே மிகப் பலவாயிருக்கும் வேலைசெய்யும் வண்டுகளே நாள்முழுதும் சோலைகடோறுந் திரிந்து ஒவ்வொரு பூவிலுமுள்ள தேனையும் பூந்தாதாகியமெழுகையும் சேர்த்துக்கொண்டு கூட்டுக்கு வருகின்றன.

தாய்வண்டு பல முட்டைகளிடும். அம்முட்டைகள் சிலநாட்களினுள்ளே சிறையும் பாதமுமில்லாத கொழு

த்த சிறிய புழுக்களாகின்றன. இப்புழுக்களை மிகச்சாவ தானமாக வேலைசெய்யும் வண்டுகள் தேனூட்டி வளர்க்கின்றன. தாய் வண்டுகளாய் வளரும் புழுக்களுக்கு அக் கூட்டிலே பெரிய மண்டபங்களைக் கட்டிவைத்து அதிகந்தேனூட்டியும் வேலைசெய்யும் வண்டுகளாய் வளரும் புழுக்களுக்குச் சிறிய மண்டபங்களைக் கட்டிவைத்து அற்பமான தேனூட்டியும் வளர்க்கின்றன.

**பரீக்ஷவினா.** வண்டுகள் எத்தனை வகைப்படும்? ஒரு கூட்டிலே எத்தனை விதமான வண்டுகள் இருக்கும்? தாய்வண்டைப்பற்றி என்ன அறிவாய்? சோம்பலான வண்டைப்பற்றி என்ன அறிவாய்? வேலைசெய்யும் வண்டைப்பற்றி என்ன அறிவாய்?

---

## உ௬. தேன்வண்டு. II.

| | |
|---|---|
| புறப்படுதல் - தோன்றுதல். | முட்டை - சினை. |
| மகரந்தம் - பூந்தாது. | பண்டசாலை - களஞ்சியம். |

சிலநாட்களின்பின்பு அப்புழுக்களுள்ளே ஒன்று தாய்வண்டாய் வளர்ந்து வெளியே புறப்பட்டு வந்து பாடும். இந்தச் சிறியதாகும் தாய்வண்டு பாடுவதைக் கேட்டவுடனே பெரியதாகிய தாய்வண்டு அதை அக் கூட்டினின்றும் துரத்திவிடப் பிரயாசப்படுகின்றது. அப்போது வேலைசெய்யும் வண்டுகள் அந்தச் சிறிதாகிய தாய்வண்டைப் பெரிதாகிய தாய்வண்டு வெளியே துரத்திவிடாதபடி பாதுகாக்கின்றன. அதைக் கண்டு

பெரிதாகிய தாய்வண்டு கோபங்கொண்டு "இனிமேல் யான் இக் கூட்டினுள்ளிருக்க உடன்படேன்" என்று சொல்லிப் புறத்தே பறந்துபோகும். அப்போது அநேகம் பெரிய வண்டுகளும் அதனோடு பின்தொடர்ந்து சென்று வேறோரிடத்திலே தங்களுக்குக் கூடு கட்டிக் கொள்ளுகின்றன.

பின்பு பழைய கூட்டிலே சிறிதாகிய தாய்வண்டே தலைமையைப் பெறுகின்றது. படிப்படியே அங்கிருந்த புழுக்களெல்லாம் வளர்ந்து வண்டுகளாகின்றன. தாய் வண்டாய் வளரத்தக்க புழுக்களையெல்லாம் இந்தச் சிறிதாகிய தாய்வண்டு கொன்றுவிடுகின்றது. இதுவும் பெரிதாகிய தாய்வண்டுபோலவே பக்குவகாலத்து முட்டையிட்டு, வேறொரு சிறிதாகிய தாய்வண்டு தனது முட்டையில் உண்டானவுடனே தான் அக்கூட்டைவிட்டு அப்பாற் பறந்துபோகின்றது.

வேலைசெய்யும் வண்டுகளின் உடம்பிலே இரண்டு பைகள் இருக்கின்றன. அவைகளுள் ஒன்று தேன்பை; மற்றையது மெழுகுப்பை. தேன்வண்டுகளின் நாக்கள் மிக நீளமானவை. வேலை செய்யாதபோது அவைகள் அந்நாக்களை மடித்து வைத்துக்கொள்ளுகின்றன. பூக்களினுள்ளே இந்த நாக்களை நீட்டியே அவைகள் தேனையெடுத்துத் தேன்பைக்குள் வைத்துக்கொண்டு போகின்றன. பூக்களிலே அவ்வண்டுகள் தேனெடுக்க இருக்கும்போது கால்களிலே தோய்ந்த மகரந்தத்தை மெழு

குப்பையினுள்ளே வைத்துக்கொண்டு போகின்றன. அதுவே மெழுகாம்.

இப்பைகள் இரண்டும் நிறைந்தவுடனே அவைகள் கூட்டையடைந்து, பதமாகும்வரைக்கும் பூந்தாதை நன்றாய்ப் பிசைந்து, அந்த மெழுகினாலே ஆறுகோண முள்ள மண்டபம்போலப் பல பண்டசாலைகளை உண்டாக்கி அவைகளினுள்ளே தேனைநிறைத்துப் பின் அவைகளை மெழுகால் மூடிவிடுகின்றன. வெய்யிற்காலத்துச் சம்பாதித்துவைத்த இந்தத் தேனே மழைக்காலத்து அவைகளுக்கு உணவாகும். மழைக்காலத்திலே அவைகள் வேலைசெய்வதில்லை. அக்காலம் வருதற்கு முன்னரே வேலைசெய்யும் வண்டுகள் சோம்பலாயிருக்கும் வண்டுகளுக்கு உணவுகொடுக்க விருப்பம் இல்லாமையாற் கொன்றுவிடுகின்றன.

நாம் ஒருபோதும் சோம்பலாயிருத்தல் ஆகாது என்பது இத் தேன்வண்டுகளைப் பார்க்கும்போது நமக்கு நன்றாகப்புலப்படுகின்றது.

**பரீக்ஷைவினா.** இப்பாடத்திலே தாய்வண்டுகளைப்பற்றி என்ன சொல்லப்பட்டது? வேலைசெய்யும் வண்டுகளைப் பற்றி என்ன சொல்லப்பட்டது? இதனால் நமக்கு என்ன புலப்படுகின்றது?

---

## உச. இராமாயணம். 1111.

பர்ணசாலை - இலையால்வேய்த [வீடு.
குன்றுதல் - குறைதல்.
இழிந்தவர் - நின்றநிலையிலிருந் [துகீழே சென்றவர்.
இரக்ஷித்தல் - பாதுகாத்தல், [ஈடேறப்பண்ணுதல்.
துயர் - துன்பம்.
ஊழ் - விதி.
அந்தரமார்க்கம் - ஆகாயவழி.
வநிகை - சிறுசோலை.
புடை - பக்கம்.
விமானம் - ஓர்வகைத்தேர்.
அசுவம் - குதிரை.

இராமசுவாமியும் இலக்குமணரும் சீதையும் தண்டகாரணியத்திற் புகுந்து கோதாவரியாற்றங்கரையிலுள்ள பஞ்சவடியென்னும் இடத்திலே பர்ணசாலை செய்திருந்தனர். அப்போது முனிவர்கள் பலருங் கூடி வந்து இராமசுவாமியை நோக்கி "மகாராசனே! நாம் இராவணனாகிய இராக்கதனாற் படுந்துயருக்களவில்லை. அவனால் நாமெல்லாம் வேத ஒழுக்கங் குன்றி இழிந்தவர்களானோம். ஆதலினாலே உமக்கு அடைக்கலம்" என்றார்கள். அப்போது இராமசுவாமி அவர்களைப் பார்த்து "முனிவர்களே! பயப்படாதிருங்கள். இராவணனைக் கொன்று உங்களை இரக்ஷிப்பேன்" என்று சொல்லி, பதின்மூன்று வருஷம் அங்கே இருந்தார்.

அப்போது இராவணன் சீதையின் அழகைக் கேள்வியுற்று ஊழின்வழியே செல்வானாய்த் தன் மாமனாகிய மாரீசனைப் பொன்மானாய் இராமசுவாமி இருக்கும் இடத்திற்போய் உலாவும்படி செய்தான். சீதை அம் மானினுடைய அழகைக் கண்டு மயங்கி, அதனைப் பிடித்துத்

தரும்படி இராமசுவாமியை வேண்ட, அவரும் அதன் பிறகே போனர். பின்பு இராமசுவாமியைத் தேடி இலக்குமணரும் போகத் தனியேயிருந்த சீதையை இராவணன் ஆகாயரதத்திலேற்றி அந்தரமார்க்கமாய் இலங்கைக்குக் கொண்டுபோனன்.

பின்பு இராமசுவாமி சீதையைத் தேடிக்கொண்டு போகும்போது குரங்குகளுக்கு அரசனுகிய சுக்கிரீவனுடன் சிநேகிதம் ஆனர். சுக்கிரீவனுடைய முதன்மந்திரியாகிய அனுமான் இலங்கைக்குச் சென்று அங்கே அசோகவநிகையிலே சீதையிருப்பக் கண்டுவந்து அறிவிக்க, இராமசுவாமி அனுமான் முதலாகிய குரங்குச் சேனைகளோடு இலங்கை நோக்கிச் சென்று, அக் குரங்குப் படையின் உதவியினலே மலைகளையும் மரங்களையும் பெயர்த்துக் கடலையடைத்து இராமசேது எனப் பெயர் பெற்ற அணையைக் கட்டி, அதன் வழியாய்க் கடலைக் கடந்து இலங்கையை யடைந்து இராவணனேடு யுத்தஞ் செய்து அவனைக் கொன்று சீதையை மீட்டார். பின்பு இராவணனுடைய தம்பியாகிய விபீஷணனை இலங்கைக்கு அரசனுக்கி, இராமசுவாமி குரங்குப்படைகள்புடை சூழ விமானத்தேறி ஆகாயமார்க்கமாகக் கடல்களையும் காடுகளையும் மலைகளையும் கடந்து அயோத்தியை யடைந்தார். அவர் வரவை எதிர்நோக்கியிருந்த பரதன் வந்து வணங்க அரண்மனையை யடைந்தார். பின்பு சுபமுகூர்த்தத்திலே இராமசுவாமிக்குப் பட்டாபிஷேகம் செய்ய

ப்பட்டது. இராமசுவாமி நீதிதவறாது அரசியலை நடாத்தி வருவாராயினர்.

ஒருநாள், "அரக்கன் கவர்ந்த பெண்ணைச் சேர்த்தமை குற்றம்" என்று உலகத்தவர் பேசியதைக்கேட்டு, இராமசுவாமி சீதையை முனிவர்கள் வசிக்கும் காட்டுக்கு அனுப்பினார். வன்மீக முனிவர் சீதையை ஆதரித்து அவ்வனத்திற் பிறந்த குசன் இலவன் என்னும் இராமசுவாமியினுடைய இரண்டு பிள்ளைகளுக்கும் கல்வி கற்பிப்பாராயினர். அவர்கள் சகல கலைகளையுங் கற்று, இராமசுவாமியினுடைய சரித்திரத்தைக் கூறும் வன்மீக ராமாயணத்தைச் செவிக்கினிமையாக யாழிலமைத்துப் பாடவும் வல்லவராயினர்.

சீதையும் குசன் இலவன் என்னும் இரு புத்திரரும் இப்படியே தண்டகாரணியத்திருப்ப, அயோத்தியிலே இராமசுவாமி அசுவமேதயாகஞ் செய்யத் தொடங்கி, அதற்காக அழகாய் அலங்கரிக்கப்பட்ட ஒரு குதிரையை விடுத்தார். அது எல்லாத் தேசங்களுக்கும் போய்ப் பின்பு வன்மீகமுனிவரின் ஆச்சிரமத்துக்கும் போயது. அங்கிருந்த குசனும் இலவனும் விளையாட்டாக அதைப் பிடித்துக் கட்டிவிட்டார்கள். இராமசுவாமியினுடைய போர்வீரர் அதனை மீட்டுக்கொண்டு செல்ல இயலாதவராயினர். பின்பு இராமசுவாமி அப்புத்திரர் பாடிக்கொண்டிருந்த இராமாயணத்தைக் கேட்டு மன முருகினார். அப்போது வன்மீகமுனிவர் இராமசுவாமி

யாகஞ்செய்த சபையிலே சீதாதேவியாரைக் கொண்டு போய்விட, அவர் "நான் கற்புடையேன் என்பது மெய் யாயின் பூமியே எனக்கு வழிதா" என்றார். பூமி பிரிய ஓர் சிங்காசனந் தோன்றிற்று. சீதாதேவியார் அதில் ஏறி மறைந்தார்.

சிறையிருந்தபோதும் நாயகரைப் பிரிந்திருந்த போதும் மற்றெத்துயர் சம்பவித்தபோதும் கற்புநிலை யைக் கைவிடாத சீதையைப் பெண்களெவரும் தமக் கொரு முன்மாதிரியாகப் பார்த்தொழுகுவாராக.

**பரீக்ஷவினா.** இராமசுவாமி தண்டகாரணியத் திருந் தபோது முனிவர்கள் வந்து என்ன சொன்னார்கள்? அதற்கு அவர் என்ன சொன்னார்? அப்போது இராவணன் செய்த தென்ன? பின்பு இராமசுவாமி என்ன செய்தார்? இராமசு வாமி அயோத்தியை அடைந்தபோது நடந்ததென்ன? ஒரு நாள் உலகத்தவர் என்ன பேசினர்? இராமசுவாமி என்னசெய் தார்? சீதையை ஆதரித்தது ஆர்? இராமசுவாமியின் புத்திரர்க ளுக்குப் பெயர் என்ன? அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? அப் போது அயோத்தியிலே நடந்ததென்ன? பின்பு சம்பவித்த தென்ன?

---

## உரு. மாடு.

| | |
|---|---|
| கஷ்டம் - துன்பம். | சின்னம் - அடையாளம். |
| கோமயம் - சாணம். | அட்டல் - சமைத்தல். |

மாடு, மனிதருக்கு மிகுந்த உபயோகமான மிரு கம். ஆண்மாடு, எருத்துமாடு என்றும் பெண்மாடு, பசு

மாடு என்றும் சொல்லப்படும். மனிதருக்கு உபகாரஞ் செய்யும் மிருகங்களுக்குள்ளே மாடுகளுக்கு மேற்பட்டவைகள் அல்லது சமமானவைகள் உலகத்திலில்லை. ஆதலினாலே எந்தத் தேசத்தாராலும் அவைகள் அன்போடு வளர்க்கப்படுகின்றன. அவைகள் தம்மை வளர்ப்பவர்களை அறிந்து அவர்களிடத்தே அன்பு உள்ளவைகளாய்க் கீழமைந்து நடக்கும். புல்லுள்ள இடங்களிலே போய் மேய்ந்துவிட்டு வீட்டுக்கு வந்துசேரும். தம்மால் இயன்ற தொழில்களையெல்லாம் மகிழ்ச்சியோடு செய்துவிடும்.

எருத்துமாடுகள் பண்டிகளை இழுத்துச் செல்லுதற்கும் பொதியேற்றிச் செல்லுதற்கும் வயல்களை ஏரான் உழுதல் முதலியவற்றுக்கும் உபயோகப்படுகின்றன. எருத்துமாடுகள் இல்லாவிட்டால் நமது ஊரிலே பயிரிடுந் தொழில் செய்தல் பிரயாசமேயாம். விரிந்த இரட்டைக்குளம்புடைய மாடுகளேயன்றி ஒற்றைக்குளம்புடைய குதிரை முதலியன களிமண் சேற்றிலே உழுதல் முதலியவற்றிற்கு உபயோகப்படமாட்டா. மாடுகளிலே பொதியேற்றிச் செல்லுதல், வீதிகள் புகைரதங்கள் அதிகப்பட்டிருக்கும் இக்காலத்திலே வரவரக் குறைந்துபோகின்றது. நம் தேசத்திலே எருத்து மாடுகள் பெரும்பாலும் இரட்டையாகவே பண்டிகளிற் பூட்டப்படுகின்றன. எடுக்கமாட்டாத பொதிகளையேற்றியும் இழுக்கமாட்டாத பாரமுள்ள பண்டிகளிற் பூட்டி-

யும் சிலர் மாடுகளை மிக வருத்துகின்றார்கள். அற்பமான உணவு கொடுக்கின்றார்கள்; அதிகமாக வேலை செய்விக்கின்றார்கள். உரியகாலத்திலே போதிய அளவு உண்ணு தொழியின் தாம் படுந் துயரை அறிந்திரிந்தும் தமக்காக வேலைசெய்யும் மாடுகளுக்கு உணவுகொடாது வருத்துதல் இரக்கமில்லாதவர் செயலேயாம். பண்டிகளை யோட்டும்போது மாடுகளின் வாலை முறுக்கி மடக்குதல் ஊசிகளாற் குத்துதல் முதலிய இச்செய்கைகளெல்லாம் பெரும் பாதகமேயாம். "எருது முக்கிவர வீடு நக்கி வரும்" என்பது தமிழ்நாட்டில் வழங்கும் பழமொழியன்றோ! ஆதலினாலே மாடுகளை இவ்விதமாகக் கஷ்டப்படுத்துதல் தமக்கே பெரிய நஷ்டமாகுமென்பதை நம்மவர்கள் சிந்திப்பார்களாக.

பசுமாடுகள் மிக மேலான பிறவிகளென இந்தியராற் பூசித்து வணங்கப்படுகின்றன. அவைகளின் உறுப்புக்களிலே தேவர்கள் வசிப்பார்களெனச் சைவசமய நூல் கூறும். பசுமாடுகள் அத்துணைப் பெரும் பிரயோசனத்துக்குரிய எருத்துமாடுகளை நமக்கு ஈன்று தருவதோடு அமையாது நல்ல பாலையுந் தருகின்றன. பசுவின் பாலுக்கு நிகரான உணவு பிறிதொன்றில்லை. பாலாய் உண்ணப்படுவதுமேயல்லாமல் அது தயிராயும், அத்தயிர் மோராகவும் நெய்யாகவும் பிரிக்கப்பட்டும் பாலர்களுக்கும் நோயாளர்களுக்கும் ஏனையோர்களுக்கும் நல்ல உணவாகின்றது. சிலர் கன்றுக்குரிய பசுவின்பாலை அக்

கன்றுக்குச் சிறிதும் விடாது கறந்துகொள்கின்றார்கள். இது பெரும்பாதகச் செயலேயாம். கன்றுக்கு வேண்டிய பிற உணவுகளைக் கொடுத்து அதன் பாலில் ஓர் பாகத்தைப் பெறுவதே நீதியாம். கடவுள் வழிபாட்டிற்கு உரிய பால் தயிர் நெய் கோமயம் கோசலம் என்னும் பஞ்சகவ்வியங்களையும் நமக்குத் தருவது பசுவே. நாம் தரிக்கும் சிவசின்னமாகிய விபூதியைப் பெறுதற்குச் சாணத்தைத் தருவதும் இப் பசுவே.

மாடுகளின் சாணம் எருவாயும் விறகாயும் உபயோகப்படும். இந்தியாவிலே உலர்ந்த சாணமே பெரும்பாலும் சோறு அட்டல் முதலியவைகளுக்கு உபயோகிக்கப்படும் விறகாகும். அது எரியும்போது துர்க்கந்தம் வீசுவதில்லை. நமது ஊரிலே இச்சாணம் வீடுகளை மெழுகுவதற்கு உதவுகின்றது. அது துர்க்கந்தங்களைப் போக்கும் இயல்புடையது. ஐரோப்பாவிலே வீடுகளிலே துர்க்கந்தங்களைப் போக்குதற்கு, பெரும்பொருட் செலவுக்குரிய கரித்திராவகத்தை உபயோகிப்பார்கள். நமது ஊர்களிலே பொருட்செலவு இல்லாமல் சாணத்தால் அது செய்யப்படுகின்றது.

மாட்டிறைச்சியை உண்ணும் அன்னிய தேசத்தவர்களைப் பார்த்து நந்தேசத்தாருட் சிலரும் அவ்வாறு செய்ய இக்காலத்தே ஆரம்பிக்கின்றனர். இம்மகாபாதகச் செயல் செய்வார் மனிதரிறைச்சியை உண்ணு தொழித்தமேனோ? மாமிசம் புசியாத அம்மாடுகளைப் பார்க்கினும்

மேற்பட்ட அறிவுடையவர் இவர்தாமா? எரிவாய்நரகத் துக்காளாகும் இவரைக் காணவும் அருவருத்து நாமெல்லாம் நமக்குப் பெரும் பிரயோசனத்துக்குரியனவும் நம்மைப்போன்ற உயிருள்ள பிராணிகளுமாகிய மாடுகளை மிக்க அன்போடு பாதுகாத்து வளர்ப்போமாக.

**பரீக்ஷைவினா.** மாடு எத்தன்மையான மிருகம்? எருத்துமாடுகள் எதற்கு உபயோகப்படுகின்றன? அவைகளைச் சிலர் எப்படி வருத்துகின்றார்கள்? பசுமாடுகளைப்பற்றி என்ன சொல்லப்பட்டிருக்கின்றது? மாடுகளின் சாணத்தின் உபயோகம் என்ன? மாட்டிறைச்சியை உண்ணலாமா? ஏன்?

---

## ௨௬. சாஸ்திரப் பயிற்சி.

இக்காலத்திலே யுள்ளவர்கள் அநேகர் தமதுபிள்ளைகள் எழுதவும் வாசிக்கவும் கற்றுக்கொண்டால் அமையும் என்று எண்ணுகின்றார்கள். சிலர் கணிதசாஸ்திரத்திலே அற்பமான அறிவைப்பெற விருப்பம் உள்ளவர்களாயும் இருக்கின்றார்கள். அவ்வளவே அவர்கள் பெறுங் கல்வி. உடனே வேளாண்மை முதலிய தொழில்களை ஆரம்பித்துவிடுகின்றார்கள். ஆரம்பித்த அன்றைக்கே புத்தகத்தை மறந்துவிடுகின்றார்கள். அத்தொழில்களைச் செய்யும்போது இடையிடையே எவ்வளவு வசதியான காலங்கள் இருந்தாலும் பின்பு ஒருபோதும் நூல்களை வாசிக்க அவர்களுக்கு மனம் வராது. இப்படியே முன் படித்தவற்றையும் மறந்துவிடுகின்றார்கள். அரச

சேவையைச் செய்யும்பொருட்டே இக்காலத்து அன்னியபாஷையைக் கற்பவர் தாமும் அத்தொழிலைப் பெற்றுக்கொண்டமாத்திரத்தே கல்வி கற்பதை ஒழித்துவிடுகின்றனர். இவர்கள் ஒருபோதும் கல்வியறிவுடையவர்கள் என்று எண்ணப்படமாட்டார்கள்.

சாஸ்திரங்கள், சமயசாஸ்திரம் தருமசாஸ்திரம் நீதிசாஸ்திரம் வைத்தியசாஸ்திரம் கணிதசாஸ்திரம் தருக்கசாஸ்திரம் பூமிசாஸ்திரம் வானசாஸ்திரம் முதலாகப் பலவாம். இந்தச் சாஸ்திரங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியே விளக்கும் நூல்களோ மிகப் பல. ஒவ்வொருவரும் இவைகளிலே இயன்றளவு கற்றுக்கொள்ளுதற்குப் பிரயாசப்படுதல் வேண்டும். எவரும் மரணபரியந்தங் கற்குந்தொழிலைக் கைவிடுதல் ஆகாது. அவ்வாறு கற்பவர்களே கல்வியறிவுள்ளவர்களாய் விளங்குவார்கள். "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்—சாந்துணையுங் கல்லாத வாறு." "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்-கற்றனைத் தூறு மறிவு" என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும்.

நூல்களைப் படித்தலாலும் படித்தவர்களோடு சம்பாஷித்தலாலும் மாணக்கருக்குப் படிப்பித்தலாலும் நூல்களைச் செய்தலாலும் ஒருவற்கு நிறைவான சாஸ்திரப்பயிற்சி உண்டாம். நூல்களைப் படித்தலால் ஒருவற்கு அறியாமை நீங்க அறிவு விளங்கும்; சரீரம் அப்பியாசம் செய்யவே பெலம் அடைவதுபோல மனம் பெலம் அடையும்; நல்ல வசன நடையிலும் செய்யுள்

நடையிலும் அவன் தன் பாஷையைப் பேசவும் எழுதவும் வல்லவனாவன்; மேலான நூல்களைக் கற்றலால் நல்லொழுக்கமும் தெய்வபத்தியும் உடையவனாவன்.

நாம் பிறக்கும்போது அறியாமை உடையவர்களாயிருக்கின்றோம். கண்ணினாலே பார்த்தல் காதினாலே கேட்டல் முதலியவற்றால் அறிவைப் பெறுகின்றோம். அறிவித்தாலன்றி அறியமாட்டாத நமக்கு முதலிலே அறிவிப்பவர்கள் தாய் தந்தையரே. தாய் தந்தையர்முதலியவர்களிலும் பார்க்க நமக்கு அறிவைக் கொடுக்க வல்லவைகள் நூல்களே. அநேக ஆயிரம் வருடங்களாக நம் முன்னோர் தம்மனுபவத்தால் அறிந்தவைகளைக் கூறுவன அவர்களெழுதிய நூல்களே. ஒருதேசத்தை ஒருவன் அநேக நாட்களாகச் சுற்றிப்பார்த்து அறிவதிலும் பார்க்க அதைப்பற்றிக் கூறப்பட்டிருக்கும் 'நூல்களைப் படித்தலால் அற்ப பிரயாசத்துடன் அதிகமானவற்றை அறிந்துகொள்ளுவான். இளமைப் பருவத்திலே தொடங்கி உயிரோடிருக்குமளவும் படிப்பவர்களே படித்தலால் வரும் இன்பத்தை அடைவார்கள். எவன் எந்தச் சாஸ்திரத்தைக் கற்கவில்லையோ அவனுக்கு அது இருள் போலாம். "கண்டது கற்கப் பண்டிதனாவன்" ஆதலினாலே இயன்றளவு சாஸ்திரங்களைக் கற்க எவரும் பிரயாசப்படுதல் வேண்டும்.

**பரீக்ஷைவினா.** இக்காலத்திலேயுள்ளவர்கள் கல்வியைப் பற்றி என்ன எண்ணம் உடையவர்களாய் இருக்கின்றார்கள்?

சாஸ்திரங்களாவன யாவை? சாஸ்திரப்பயிற்சி எப்படி உண்டாம்? நூல்களைப் படித்தலால் வரும் பிரயோசனம் என்ன? என் இயன்றளவு சாஸ்திரங்களைக் கற்க எவரும் பிரயாசப்படல் வேண்டும்?

---

## உஎ. சிலந்தி.

ஆச்சரியம் - அதிசயம்.
அமைதல் - பொருந்துதல்.
பரதவர் - நெய்தல் நிலத்து மனிதர்.
விஷம் - நஞ்சு.

சிலந்திகளிலே பலவகை உண்டு. சில, மிகச்சிறியவைகளாய் இருக்கின்றன. சில, கால்களுள்ள அரைமுழ நீளமான மிகப்பெரிய சிலந்திகளாய் இருக்கின்றன. சிலந்திகளுள்ளே சில சாதி, நாம் இருக்கும் வீடுகளிலே வசிக்கின்றன; சில, மரங்கள் செடிகள் முதலியவற்றிலே கட்டிய கூட்டில் வசிக்கின்றன; சில, தண்ணீர் தம்மேற் படாவண்ணம் உடம்பைச் சுற்றி ஓர்வகை வலையை நெசவுபண்ணிக்கொண்டு அத் தண்ணீரினுள்ளேயே வசிக்கின்றன; சில, பூமிக்குள்ளே கிடங்குகளிற் குடிபுகுந்து பார்ப்பவர்கள் ஆச்சரியப் படத்தக்க கதவுகள் உள்ள வீடுகளை உண்டாக்கி அவற்றினுள்ளே சீவிக்கின்றன.

சிலந்திகளின் உடம்பினது பின்பாகம் ஒரு சிறிய வட்டமான பைபோலிருக்கும்; அது முன்பாகத்தினும் மிகப் பெரியது. அந்த முன்பாகத்திலேயே ஒவ்வொரு புறத்திலும் நாலுநாலாக எட்டுக் கால்கள் அமைந்திருக்கின்றன. அதின் தலையிலே கூரான வாள்போன்ற இர

ண்டு கொடுக்குகள் இருக்கின்றன. அந்தக் கொடுக்குகளின் நுனியிலேயுள்ள துவாரத்தினாலே சிலந்திகள் கடிக்கும்போது விஷம் பாய்கின்றது. இந்த விஷமே அது ஈ முதலிய பிராணிகளைக் கொன்று தின்ன உதவுகின்றது.

சிலந்திகளிலே சில சாதிக்கு ஆறு கண்களும் சில சாதிக்கு எட்டுக் கண்களும் உண்டு. சிலந்தியின்தோல் மிகவும் பெலமானது. அதின் கால்களில் ஒன்று முரிந்து போனாலும் அது பின்பு முளைத்து வளர்ந்துவிடும். சிலந்தி தான் இடும் முட்டைகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் போகும்போது உடன் கொண்டு போகும். அது தன் கால்கள் முரிய வரினும் முட்டைகளை எந்தப் பிராணியாவது பறித்தெடுக்க விடமாட்டாது.

சிலந்தி தான் உண்டாக்கும் ஓர் வகை நூலினாலே வீடுகளிலும் மரங்கள் முதலியவைகளிலும் வலைகளை நெசவுபண்ணி அவைகளின் வழியாய் இரைகளை அகப்படுத்தி உண்ணுகின்றது. அதின் உடம்பினுள்ளேபிசின் போன்ற ஓர்வகைப் பொருள் நிறைந்த பலசிறிய பைகள் உண்டு. அந்தப் பிசின் போன்ற பொருள் உடம்பின் பின்புறத்துள்ள துவாரங்களின் வழியாய் வெளியே வரும்போது அது காற்றிலேபட்டுப் பெலமான அழகிய நூலாகின்றது. அந்த நூல்களைச் சிலந்தி பின்னங்கால்களால் முறுக்கி ஓர்வகைக் கயிறுபோலாக்கித் தன் வேலை

க்கு உபயோகப்படுத்துகின்றது. சிலசாதிச் சிலந்திக ளின் நூல்கள், ஆயிரஞ் சேர்ந்தாலும் ஓர் மயிரளவுதா னும் பருமை அடையமாட்டாத அவ்வளவு மெல்லிய வைகளாய் இருக்கின்றன. சில சிலந்திகள், சிறியபறவை கள் தாமும் தங்கள் வலைக்குள்ளே சிக்கிக்கொள்ளத் தக்க அவ்வளவு பெலமான நூல்களை உண்டாக்குகி ன்றன. பாதவர் கடலிலே வலையை விரிப்பதுபோல நமது வீட்டின் உட்புறத்தே சிற்சில இடங்களில் சிலந் திகள் வலைகளை உண்டாக்கி, அவற்றின் நடுவிலே தாம் மறைந்திருக்கத் தக்கதாகச் செய்யப்பட்ட இடங்களி லிருந்து அவ்வலைகளிலே வந்து அகப்படும் ஈ முதலிய பிராணிகளை எதிர்பார்த்துக்கொண்டு அசைவற்றிருக் கின்றன. ஈ முதலிய பிராணிகள் வந்து வலைகளிலே அகப்படுமேல் உடனே சிலந்தி அவைகளின்மேற் பாய் ந்து கொடுக்குகளாற் குத்திக் கொன்று தின்னும். சில சிலந்திகள் மரங்களிலே தாம் உண்டாக்கிய நூல்களில் ஏறுவதும் இறங்குவதுமாய் அங்குமிங்கும் ஆடிக்கொண் டிருக்கின்றன. அவைகள் இரையைக்கண்டமாத்திரத்தே நூலாகிய ஆதாரத்துடனே அவ்விரைகளின்மேற் பாய் ந்து பிடிக்கின்றன. சில சாதியான சிலந்திகள் நூல் உண் டாக்குவதில்லை. அவைகள் இரைகளைக் கண்டமாத்திர த்தே அவைகளின்மேற் புலிகள் போலப் பாய்ந்து பிடி க்கின்றன. பூமிக்குள்ளே வீட்டை உண்டாக்கி இருக் கும் சிலந்தியின் விஷத்தால் அநேகமாடுகள் முதலிய பிராணிகள் இறந்துவிடுகின்றன. புலிமுகச்சிலந்தி முத

லிய சில சிலந்திகளின் விஷம் மிகக் கொடியது. அது மனிதரைக் கடித்தால் அதின் விஷம் அவரை மிக வருத்திவிடுகின்றது. இக்காலத்திலே சிலர் சிலந்திகளின் நூலினாலும் ஓர்வகைப் பட்டுவஸ்திரம் நெசவுபண்ண ஆரம்பித்திருக்கின்றனர்.

**பரீக்ஷைவினா.** சிலந்திகளின் பேதங்களைக் காட்டி விளக்குக. சிலந்திகளின் உடம்பு எவ்விதமானது? சிலந்திகளிலே சிலசாதி எவ்விதமானது? சிலந்தியின் நூலைப்பற்றி என்ன அறிவாய்? அதை எதற்காக உபயோகிக்கின்றது? நூலை உண்டாக்கும் சிலந்திகளின் பேதங்களை விரித்துக்கூறுக. பூமிக்குள் வீட்டை உண்டாக்கும் சிலந்தி எப்படிப்பட்டது? புலிமுகச் சிலந்தி எப்படிப்பட்டது? நூலை உண்டாக்காத சிலந்தியும் உண்டா? இக்காலத்துச் சிலர் அதன் நூலை எவ்விதமாய் உபயோகப்படுத்த முயன்றிருக்கின்றனர்?

---

## உஅ. ஆலயம்.

தியானித்தல் - மனதினாலே நினைத்தல்.
அருவடிவம் - சூக்குமசரீரம்.
கருணை - கிருபை, தயை.
அங்கம் - உறுப்பு.
சரீரங்களைக்காட்டினும் - சரீரங்களிலும்பார்க்க.
முதுமை - வயோதிபம்.
வஸ்திரம் - ஆடை.
பயபக்தி - அச்சத்தோடுகூடிய அன்பு.

ஆலயமாவது, எங்கும் நிறைந்த கடவுள் நாம் செய்யும் வழிபாட்டை ஏற்கும் பொருட்டு வெளிப்பட்டவராய் எழுந்தருளியிருக்கும் இடமேயாம். மனசினாலே கடவுளைத் தியானித்து வழிபடும் பக்குவம் இல்

லாத நாம், மனிதர் இருக்கும் வீடுபோல அவர் எழுந்தருளியிருத்தற்கு ஓர் ஆலயத்தை உண்டாக்கி, அருவவடிவமுள்ள அக்கடவுள் ஆன்மாக்கள்மேற் கொண்ட பெருங் கருணையினாலே அவர்க்கு அருள் செய்யும் பொருட்டு உருவ வடிவங்கொண்டார் என்பதை எண்ணி அவ்வடிவத்தைக் கல்லினாலே அல்லது செம்பினாலே அமைத்து, இன்ன இன்ன மந்திரம் இன்ன இன்ன அங்கம் எனப் பாவித்து, சுவாமீ தேவரீர் இதிலே எழுந்தருளியிருந்து நமக்கு அருள் செய்யும் எனப் பிரார்த்தித்து வழிபடுகின்றோம். இவ்வகையாயல்லாமல் இதற்கு மேலான வேறொருவகையாய்க் கடவுளை வழிபடத்தக்க வழியை அறியமாட்டாத தன்மையை உடையவர்களாய் இருக்கின்றோம். இப்படி நாம் கடவுளை வழிபாடுசெய்யும்போது நம்முடைய மனம் வேறொன்றிலும் செல்லாது அக்கடவு ளிடத்திலேயே பதிந் திருத்தல் வேண்டும்.

இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம். மிருகம் பறவை ஊர்வன முதலிய பிராணிகளின் சரீரங்களைக்காட்டினும் நமது சரீரம் விசேடமானதல்லவா? கடலைக் கையினாலே நீந்திக் கரைசேர்ந்தவன்போல நாம் முன்னரே மிருகம் பறவை முதலிய அநேகம் பிறவிகளிற் பிறந்திறந்து பின்பு புண்ணிய மேலீட்டினாலேயே இந்த மனிதப் பிறப்பை எடுத்தேம். இளமையிலும்

முதுமையிலும் எக்காலத்தும் மனிதர்க்கு மரணம் சம்ப வித்தலை நாம் காண்கின்றேம். ஆதலின் இன்ன காலத் திலே இந்தச் சரீரம் நீங்கும் என்பது நமக்கு விளங்கா மையால் நாம் இளமைப்பருவத்திலும் கடவுளை வழி படல் வேண்டும்.

நமக்கு அன்னவஸ்திரம் தந்துதவும் தந்தைதாயரிட த்து நாம் அன்புள்ளவர்களாய் இருக்கின்ருேம். அத் தந்தைதாயர்களை நமக்குத் தந்து, நமக்குத் தர அன்ன வஸ்திரங்களை அத் தந்தைதாயர்களிடத்துக் கொடுத்த கடவுளிடத்து நாம் எவ்வளவு மேலான அன்புடையவர் களாய் இருத்தல் வேண்டும். இவ்வுலகத்திலே மாத்தி ரம் நமக்குத் துணையாயிருக்கும் தந்தை தாயரைச் சிறிது நேரமேனும் மறந்திருக்கமாட்டாத நாம், இவ்வு லகத்திலும் இறந்தபின்னும் நமக்குத் துணையாயிருக் கும் கடவுளை மறந்திருப்பதெப்படி? கடவுளிடத்தே மெய்யன்புடையவர்கள் அவர் எழுந்தருளியிருக்கும் ஆலயங்களுக்குத் தினந்தோறும் போய் அவரைத் தரி சித்து வணங்காமல் இருக்க மாட்டார்.

நாம் தாய்தந்தையர் இருக்கும் இடத்துக்குச் செல் லும்பொழுது எவ்வளவு பயபத்தியாய்ச் செல்கின்றேம். நம்மோடொத்த நண்பர்கள் இருக்கும் இடத்துக்கு நாம் செல்வதுபோலத்தாஞ அவர்கள் இருக்கும் இடத் துக்கும் செல்கின்றேம்? நமது அயலிலே இருக்கும் பெரியவர்கள் வீட்டுக்கு நாம் செல்லும் பொழுது எவ்

வளவு பயபத்தி உடையவர்களாய்ப் போகின்றேம்? நம்மை ஆளும் அரசன் வீட்டுக்கும் நாம் போகும்பொழுது எவ்வளவு பயபத்தி உடையவர்களாய்ப் போகின்றேம்? இவர்களுக்கெல்லாம் மேலானவராகிய கடவுள் எழுந்தருளியிருக்கும் ஆலயங்களுக்கு நாம் போகும் பொழுது எவ்வளவு மேலான பயபத்தி உடையவர்களாய் இருத்தல் வேண்டும் என்பதைப் பிள்ளைகளே சிந்தித்துப்பாருங்கள். பெரியோர் அல்லது அரசர் இருக்கும் இடத்திலே பேசிச் சிரித்து விளையாட உடன்படாத நாங்கள் சுவாமிசந்நிதானத்திலே அவைகளைச்செய்ய உடன்படலாமா? பெரியோர் அல்லது அரசர் இருக்கும் இடத்திலே வீண்வார்த்தை பேசவும் சண்டை செய்யவும் உடன்படாத நாங்கள் சுவாமிசந்நிதானத்திலே அவைகளைச்செய்ய உடன்படலாமா?

நமது தேசங்களிலுள்ள ஆலயங்களெல்லாம் இக்காலத்திலே எவ்விதமான நிலையில் இருக்கின்றன என்பதை ஆராய்ந்து பார்த்தல் நன்மையாகும். ஆலயத்திலே பூசை செய்யும் அருச்சகர்; கடவுள் அங்கே விசேஷமாய் எழுந்தருளியிருக்கின்றார் என்ற எண்ணம் உடையராய்த் தான் இருக்கின்றாரா? உடையராய் இருப்பரேல் அக்கோயில் எசமானருக்குச் செய்யும் மதிப்பில் ஆயிரத்தில் ஒருபங்கு மதிப்புத்தானும் சுவாமிக்குச் செய்யாரா? அருச்சகர் தாங்கள் தொழில்செய்து சீவனம் செய்தற்கு உரிய இடம் ஆலயமே என்ற எண்ணம் உடையர்க

ளாய் இருக்கின்றார்கள். தாம் செய்யும் பூசை முதலிய வைகளினாலே ஆலயத்திலே விக்கிரகத்திலே கடவுள் வெளிப்பட்டு ஆன்மாக்களுக்கு அருள் செய்யும்படி செய்யவேண்டிய அருச்சகர் தன்மை இதுவாயின், தம்மையும் நம்மையும் கெடுக்கும் அவ்வருச்சகர் உய்யும் வழியும் உளதா? இனி எசமானர்கள் தாமும் தம்மைச் சேர்ந்தவர்களும் உண்ணவும் உடுக்கவும் பிறவற்றுக்கும் பொருள் வருவாய்க்கு உரிய இடம் ஆலயமே என்ற எண்ணம் உடையர்களாய் இருக்கின்றார்கள். வழிபடுதற்கு என்று அங்கே செல்பவர்களுள்ளே பெரும்பாலார் ஆடை ஆபரண அலங்காரத்தை ஒருவர்க்கொருவர் காட்டி மகிழுதற்கும் வேடிக்கை பார்த்தற்கும் சண்டை செய்தற்கும் பிறவற்றுக்குமே உரிய இடம் ஆலயம் என்ற எண்ணம் உடையர்களாய் இருக்கின்றார்கள். ஐயையோ! இவர்கள் சுவாமிசந்நிதானம் என்ற எண்ணம் சிறிதும் இல்லாதவர்களாய்க் கெடுகின்றார்களே. "அரசன் அன்றறுப்பான் தெய்வம் நின்றறுக்கும்" என்ற வாக்கை நினைந்திருப்பரேல் இவ்விதமான நினைவுஞ் செயலும் அவர்க்கு ஒருபோதும் வரமாட்டா. தாம் தாம் செய்த வினைப்பயனைத் தாம்தாமே தப்பாது அநுபவித்துத் தொலைத்தல் வேண்டும் என்பதை எண்ணி இனி நம்மவர்கள் உண்மையான ஆலயசேவை செய்து உய்ய முயலுவதே கடன்.

**பரீக்ஷவினா.** ஆலயமாவது என்ன? நாம் எவ்வாறு அவரை வழிபடுகின்றோம்? இதற்கு மேலானவிதமாய் வழிப

டத்தக்க பக்குவம் நமக்கு உண்டா? வழிபடும்போது நம்முடைய மனம் எப்படியிருத்தல்வேண்டும்? இந்தச் சரீரம் ஏன் நமக்குக் கிடைத்தது? ஏன் நாம் இளமைப்பருவத்திலும் கடவுளை வழிபடல் வேண்டும்? ஏன் நாம் கடவுளிடத்து அன்புடையவர்களாய் இருத்தல் வேண்டும்? நாம் கடவுள் சந்நிதானத்திலே பயபத்தி யுடையவர்களாய் இருத்தல் வேண்டும் என்பதை விளக்கு? நமது தேசங்களிலுள்ள ஆலய நிலைமைகள் என்ன?

---

## உகூ. சிங்கமும் புலியும்.

மிருகம் - விலங்கு.　　　　பாதம் - கால்.
தேடுதல் - சம்பாதித்தல்.　　　　ஓசை - சத்தம்.

சிங்கமும் புலியும் பூனை இனத்தைச் சேர்ந்தவைகள். அந்த இனத்திலே மிகப் பெரியது சிங்கம். சிங்கத்தைக்காட்டினும் புலியே தோற்றத்தில் மிகப் பூனையை ஒத்திருக்கின்றது. இந்த ஒப்புமைபற்றியே பூனையானது இற்புலி என்று சொல்லப்படுகின்றது. புலியானது சிங்கம்போல உருவத்திற் பெரியதன்றாயினும் பெலத்திற் குறைந்ததன்று. பயங்கரப்படுத்துவதிலும் கொடுமையை விளைப்பதிலும் அதனினும் மேம்பட்டதே.

இம்மிருகங்கள் மற்றை மிருகங்களைக் கொன்று தின்னும். அவை இரையைத் தேடிக்கொண்டு போகும் பொழுது பூனையைப்போலவே நடக்கும் பாதத்தினோசை சிறிதும் கேளாமல் நடந்து செல்லும். இவ்வினத்தைச் சேர்ந்தவைகளுக்கெல்லாம் உறுதியாய் இறுகிய

உடம்பும் பஞ்சுபோல மிருதுவாகிய உள்ளங்கால்களும் உறுதியாய்ப் பெலத்த கடைவாய்களும் இரையைத் துண்டங்களாக வெட்டக்கூடிய கூர்மையுள்ள பற்களும் மிகக் கூரிய நகங்களும் உண்டு. இவைகளெல்லாம் இத் தன்மைகளில் ஒத்திருப்பினும் உருவத்தின் பருமையி லும் தைரியத்திலும் வேற்றுமை உடையன.

சிங்கம் ஓர்வகைப் பழுப்பான மஞ்சள் நிறம் உள் ளது; முதுகில் மிகுந்த கறுப்புடையது. புலியும் ஓர் வகை வெண்மையான மஞ்சள் நிறம் உள்ளது; ஆயி னும் இடையிடையே கறுப்பான இரேகைகள் நெருங் கியிருக்கும். சிங்கமானது மூக்கு முதல் வால்நுனிவ ரையும் ஆறுமுழத்துக்கு மேற்பட்ட நீளமும், விரும்பி யபோது உள்ளே சுருக்கிக்கொள்ளக் கூடிய கால் நகங் கள் முதல் தலையின் உச்சிவரைக்கும் இரண்டு முழத்து க்கு மேற்பட்ட உயரமும் உடையது. புலியானது சிங்க த்திற் குறைந்ததும் பூனையின் மேற்பட்டதுமான உரு வம் உடையது. சிங்கமானது மிருகராசன் என்று சொ ல்லப்படுகின்றது. பயங்கரமான மீசை மயிர்களும், ஆண்சிங்கத்தின் தலையில் நீண்டு நெருங்கிய பிடர்மயி ரும் பார்க்கும்போது அஞ்சத்தக்கனவாம். புலிகளுக்கு இவைகள் இல்லை. பெண்சிங்கத்துக்குப் பிடர்மயிர் இல்லை. வால்நுனியிலே ஆண்சிங்கத்துக்குப்போல மயி ர்க்குச்சு உண்டு. பெண்சிங்கம் ஆண்சிங்கத்தைப்போல அவ்வளவு பெரிய உருவம் உடையதன்றாயினும் பெலத்

திற் குறைந்த தன்று. குட்டிகளோடு இருக்கும்போது மிகக் கோபமும் வீரமும் உடையதாம். சிங்கத்துக்குக் கடைவாயிலே மாத்திரமன்று கால்களிலும் மிகுந்த வலிமை உண்டு. அது காலினாலே அடித்து மான் மாடு முதலியவைகளை ஒரேமுறையிற் கொன்றுவிடும். சிங்கத்துக்கு எல்லாப் பிராணிகளும் அஞ்சி நடுங்கும். அது கர்ச்சிப்பதைக் கேட்டமாத்திரத்தே மற்றெல்லாப் பிராணிகளும் தாம் இருக்கும் இடத்தை அறிந்து விடுமே என்று பயந்து சிறிதுஞ் சத்தமின்றி ஒடுங்கி விடுகின்றன.

சிங்கத்துக்குப் பசிமிகுந்தகாலத்தன்றி மற்றைக் காலத்து மனிதரை எதிர்த்து வராது. சிங்கமானது மான் முதலிய பிராணிகளைப்போல அதி வேகமாய் ஓடத்தக்கதன்று. ஆதலினாலே அது அவ்விரைகளைத்தேடி மறைவான இடங்களிலே பதுங்கிக் கிடக்கும். அது வசிக்கும் காடுகளிலுள்ள கல் மண் முதலியவைகளும் அதன் நிறமுடையனவாகலின் அவைகளுக்கு வேற்றுமை தெரியாது. மான் முதலிய பிராணிகள் சமீபத்தில் வரும்போது ஒரேமுறையிற் பாய்ந்து வாயினாற் கடித்துக்கொண்டு நகங்களால் அழுந்தப் பிடித்துக் காலினால் அடித்துக் கொன்று தின்னும்.

புலியும் அவ்விதமே மிருகங்கள் தண்ணீர் குடிக்க வரும் ஆறு குளம் முதலியவற்றின் வழியருகே பதுங்கிக்கிடந்து, அம்மிருகம் இருபது முழத்தூரத்துக்கு அப்புறம் இருப்பினும் ஒரேமுறையிற் பாய்ந்து பிடித்

திழுத்துத் தன் குகைக்குக் கொண்டுபோய்த் தின்னும். ஒருமுறை மனிதருனைத் தின்ற புலி பின்பு மற்றை மாமிசத்தை விரும்பாது. ஆசியாவிலுள்ள காடுகளிலே புலி அதிகமாய் உண்டு. ஆபிரிக்காவிலும் ஆசியாவின் சிலபாகங்களிலும் சிங்கங்கள் காடுகளிலே வசிக்கின்றன.

**பரீக்ஷவினு.** சிங்கமும் புலியும் என்ன இனத்தைச் சேர்ந்தவைகள். சிங்கத்துக்கும் புலிக்கும் பூனைக்கும் ஒன்றற்கொன்றுள்ள வேறுபாடு என்ன? சிங்கத்தின் வடிவம் எத்தன்மையானது? புலியின் வடிவம் எத்தன்மையானது? சிங்கத்தைப்பற்றி வேறு என்ன அறிவாய்? புலியைப்பற்றி வேறு என்ன அறிவாய்?

---

## ௩௦. சரீரத்தைப் பேணல்.

தோற்றுவித்தல் - பிறப்பித்தல். ஆரோக்கியம் - சுகம்.
உறுப்புக்கள் - அவயவங்கள். சீரணம் - உண்டஉணவு இரைப்
சயனம் - மக்கட்படுக்கை. [பையிலே அடையும் செய்கை.

இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வழிபடுதல் மற்றை உயிர்களுக்கு உபகாரஞ்செய்தல் முதலிய பற்பல நற்செயல்களையெல்லாம் செய்து முடித்தற்பொருட்டேயாம். இந்தச் சரீரத்தோடு நம்மை இவ்வுலகத்திலே தோற்றுவித்தகடவுள் நியமித்தபடி நாம் அச்செயல்களையெல்லாம் செய்து முடித்தற்குச் சரீரத்தைப் பேணுது ஒழிவேமேல் அது எவ்வளவு பாவமாம். கடவுளினுலே அமைக்கப்பட்ட காலபரியந்தம் இந்த

உலகத்திலே உயிரோடிருப்பவர்கள் மிகச் சிலரினுஞ் சிலரே. ஆதலினாலே யாவருஞ் சரீரத்தைப் பேணிக் கொள்ளுதற்கு இயன்றளவு பிரயாசப்படுதல் வேண்டும்.

சரீரத்தை எப்படிப் பேணலாம் என்பதைப் பற்றித் தந்தைதாயர் உபாத்தியாயர் முதலியோர் சிறுபிள்ளைகளுக்கு அறிவிப்பது அவசியமே. சரீரத்தைப் பேணுதற்கு உணவும் சரீர அப்பியாசமும் சுத்தமும் நல்ல காற்றுமே விசேடமாக வேண்டப்படும்.

குறித்த குறித்த காலத்திலே தவறாது கிரமமாய் நல்ல உணவுகளை உண்ணுதல் வேண்டும். சூடு ஆறி உலர்ந்துபோன உணவு, எண்ணெய் தேங்காய்நெய் முதலிய சேர்ந்த உணவு, பழுாத காய்கள் முதலிய இவைகளைப் போன்ற சில உணவுகள் விரைவிலே சீரணமாகத்தக்கவைகளல்ல. இவைகளை உண்ணுதல் ஆகாது. வழக்கப்படி குறித்த குறித்த காலத்திலே உண்ணாது விடுவதும் குறித்த குறித்த காலத்துக்கு இடையிலே உண்ணுவதும் ஆகாவாம்.

இந்த உடம்பானது பல உறுப்புக்களைக்கொண்ட ஒரு யந்திரம்போல இருக்கின்றது. இயக்கப்படாமற் கிடக்கும் யந்திரம் விரைவிலே பழுதாவதுபோலவே இயக்கப்படாத உடம்பும் பழுதுபடும். ஆதலினாலே சரீரத்துக்கு அப்பியாசம் அவசியம் வேண்டும். பயிரிடுந் தொழில் முதலிய தொழில்களைச் செய்து சரீரத்தை அப்பியாசப்படுத்துவோர் அவ்வாறு செய்யாதவரினும்

பார்க்க ஆரோக்கியம் உடையவர்களாய் இருப்பதை நாம் காண்கின்றேம். சரீர அப்பியாசம் உள்ளிருக்கும் அழுக்கை வியர்வை முதலியவாக வெளியே போக்கிவிடும். நரம்புகளைப் பெலம் ஆக்கிவிடும். ஒவ்வொருவித்தியா சாலைகளிலும் கல்விகற்கும் பிள்ளைகளைக்கொண்டு சரீர அப்பியாசம் செய்விப்பது முற்காலவழக்கம். இப்பொழுது அது வரவரக் குறைந்து போயிற்று. சரீர அப்பியாசஞ் செய்யாது கல்விகற்று வந்த பிள்ளைகள் வளர்ந்தபின் பயிரிடுந்தொழில் முதலிய தொழில்களைச் செய்தற்கு அவர் சரீரம் இடங்கொடாது.

நமது சரீரம் எப்பொழுதும் சுத்தமாய் இருத்தல் வேண்டும். சரீரத்திலே படியும் அழுக்கை எப்பொழுதும் சுத்தமான நீரினாலே கழுவிவிடுதல் வேண்டும். தரிக்கும் வஸ்திரம் நித்திரைசெய்யும் சயனம் குடியிருக்கும் வீடு முதலியவைகள் எப்பொழுதும் சுத்தமாய் இருத்தல்வேண்டும்.

நாம் சுவாசிக்குங் காற்றுச் சரீரத்தினுள்ளே யுள்ள அழுக்கைச் சுத்திசெய்துவிடுகின்றது. ஆதலால் அக்காற்று எப்பொழுதும் சுத்தமாய் இருத்தல் வேண்டும்.

இளமைப்பருவத்திலேயே சிறுபிள்ளைகள் இவைகளையெல்லாம் அவதானித்து அவைகளின் வழியே நடப்பார்களாயின் பின் ஒருபோதும் அப்பழக்கம் அவர்களைவிட்டு நீங்காது.

பரீக்ஷவினு. சரீரத்தை என் பேணுதல்வேண்டும்? சரீரத்தைப் பேணுதற்கு வேண்டியவைகள் எவை? என் உணவு வேண்டும்? என் சரீர அப்பியாசம்வேண்டும்? என் சுத்தம் தேண்டும்? என் நல்லகாற்றைச் சுவாசித்தல்வேண்டும்?

---

## ௬௧. பாரதச் சரித்திரம். 1.

வம்மிசம் - குலம். செபித்தல் - உச்சரித்தல்.
இறத்தல் - மரணித்தல். விவாகம் - கலியாணம்.

முன்னொரு காலத்திலே சந்திரகுலத்திற் பிறந்த பரதன் என்னும் ஒரு அரசன் இருந்தான். அவனுடைய வம்மிசத்திற் பிறந்தவர்கள் பாரதர் என்று சொல்லப்படுவார்கள். அவர்களுடையசரித்திரத்தைக் கூறும் நூல் பாரதம் என்று சொல்லப்படும்.

பாரதர் வமிசத்தவராகிய சந்தனு என்னும் அரசர்க்கு கங்கை என்னும் பெண்ணின் வயிற்றிலே வீட்டுமர் புத்திரராய்ப் பிறந்தார். பின்பு அவ்வரசர்க்குப் பரிமளகந்தி என்னும் பெண்ணின் வயிற்றிலே சித்திராங்கதன் விசித்திரவீரியன் என்னும் இரு புத்திரர்கள் பிறந்தார்கள். சித்திராங்கதன் ஒரு கந்தருவனால் இறந்துவிட்டான். வீட்டுமர் "விவாகஞ் செய்யேன்" என்னும் விரதம் உடையவரா யிருந்தார். அம்பிகை அம்பாலிகை என்னும் இரு பெண்களையும் விவாகஞ்செய்திருந்த விசித்திரவீரியன் மக்கட்பேறு இல்லாதவனாய் இறந்தான். அரசு உரிமைக்குப் புத்திரர் இல்லாமையினாலே பரிமள

கந்தி முன்பு தான் பராசரர் என்னும் முனிவரைச் சேர்ந்து பெற்ற பிள்ளையாகிய வியாசமுனிவரை வேண்ட, அம்முனிவரால் அம்பிகையிடத்தே திருதராட்டிரனும் அம்பாலிகையிடத்தே பாண்டுவும் அம்பிகையின் தோழியிடத்தே விதுரனும் பிறந்தார்கள்.

திருதராட்டிரன் காந்தாரி என்னும் பெண்ணை விவாகஞ்செய்து துரியோதனன் முதலிய நூறு பிள்ளைகளைப் பெற்றான். பாண்டு குந்தி யென்னும் பெண்ணையும் மாத்திரி என்னும் பெண்ணையும் விவாகஞ் செய்தான். ஆயினும் ''மனைவியைச் சேரில் இறப்பாய்'' என்று கிந்தமமுனிவராலே சபிக்கப்பட்டவனாய் இருந்தமையால் மக்கட்பேறு இல்லாமையினாலே வருந்துவானாயினன். அவனுடைய மனைவியாகிய குந்தி தான் பாண்டுவை விவாகஞ்செய்ய முன்னரே துருவாசமுனிவர் உபதேசிக்கப்பெற்ற மந்திரவலிமையினாலே வேண்டிய வேண்டிய தேவர்களையெல்லாம் அழைத்து அவரோடு சேர்ந்து புத்திரரைப் பெறத் தக்கவளாயிருந்தாள். அக்காலத்திற்றானே அம்மந்திரத்தினுண்மையைப் பரீக்ஷித்து அறியும்பொருட்டுச் சூரியனை நினைத்துச் செபிக்க, வந்த அச்சூரியதேவனைச் சேர்ந்து கன்னனைப் பெற்று உலகம் பழிக்குமென்று பயந்து பேழையில் வைத்து ஆற்றில் விட அக்குழந்தையைத் திருதராட்டிரனுடைய தேர்ப்பாகன் கண்டெடுத்து வளர்த்தான்.

குந்தி என்பவள், பாண்டுவை விவாகஞ்செய்திருந்த காலத்து மக்கட்பேறின்மையால் வருந்திய அப்பா

ண்டுவுக்கு, துருவாசமுனிவர் தனக்குச் செய்த உபதே சத்தைப்பற்றி அறிவித்து அவனனுமதியைப்பெற்று, அம்மந்திரத்தாலே தருமதேவனை அழைத்துச் சேர்ந்து தருமரைப் பெற்றாள். பின்பு அவள் அம்மந்திரத் தாலே வாயுதேவனை அழைத்துச் சேர்ந்து வீமனையும், இந்திரனை அழைத்துச் சேர்ந்து அருச்சுனனையும் பெற் றாள். பாண்டுவின் மற்றை மனைவியாகிய மாத்திரி யென் பவள் நாயகனுடைய அனுமதிப்படி குந்தியிடத்திலே அம்மந்திரத்தைப் பெற்று மருத்துவரை அழைத்துச் சேர்ந்து நகுலன் சகாதேவன் என்னும் இருபுத்திரர்க ளைப் பெற்றாள். தருமர் முதலிய இப்புத்திரர்கள் ஐவ ரும் பஞ்சபாண்டவர் எனப் பெயர்பெறுவர்.

இப்படியே புத்திரர்களைப்பெற்று, திருதராட்டிரன் அரசனும் விதுரன் சேனைத்தலைவனும் பாண்டு மந்தி ரியாயும் அஸ்தினபுரத்திலே அரசாண்டிருந்தனர்.

பரீக்ஷவினா. இப்பாடத்தின் பொழிப்பைச் சொல்லு.

---

## ௩௨. பாம்புகள்.

| | |
|---|---|
| பகைவர் - சத்துருக்கள். | பிரசவம் - பிள்ளைப்பேறு. |
| உமிழுதல் - கக்குதல். | கூற்று - வார்த்தை. |
| அதிவேகம் - மிகுந்தசுதி. | மணி - இரசகுளிகை. |
| பெற்றி - தன்மை. | ஔடதம் - மருந்து. |

பாம்புகளிலே நாகம், பறவைநாகம், மண்டலிப் பாம்பு, சாரைப்பாம்பு, கருவழலையெனப் பலவகை

யுண்டு. அவைகள் ஒவ்வொன்றிலும் பற்பலபேதங்க ளும் உண்டு. மிருகங்கள் முதலிய பிராணிகள் பகைவர் எதிர்க்கும்போது கொம்பாற் குத்துதல் காலால் உதை த்தல் முதலிய செயல்களைச் செய்து தம்மைப் பாது காப்பதுபோலவே, ஊர்வனவாகிய இப்பிராணிகளும் பகைவரைக் கடிக்கும்போது பற்களின் வழியாய் ஓர் வகை நஞ்சை உமிழ்ந்துவிடுஞ் செயலினாலே தம்மைப் பாதுகாக்கின்றன. எறும்பு தேள் முதலியன உமிழும் நஞ்சினும் இந்நஞ்சு மிகக் கொடியது. இப்பாம்புகளினு ள்ளே நாகங் கடித்தாற் பிழைத்தல் இல்லையென்றே சொல்லலாம்.

பாம்புகளுக்குக் கால்களுமில்லை, கைகளுமில்லை, சிறைகளுமில்லை. ஆயினும் மற்றெல்லாப் பிராணிகளி லும்பார்க்க அவைகள் அதிகவேகமாக ஊர்ந்துசெல்கின் றன. எலி தவளை பூச்சி முதலிய இரைகளை இலகுவாய்த் துரத்திச் சென்று பிடித்துண்கின்றன. பாம்புகள் எவ் விதமாய் ஊர்கின்றன என்று அறிந்துகொள்ளுதல் பிர யாசம். தலையையும் உடம்பின் ஓர் பகுதியையும் முன்பு நீட்டி நிலத்தில் அழுத்திக்கொண்டு பின்பு மற்றைப் பகுதியை இழுத்துக்கொள்ளும் பிராணிகள் போலப் பாம்புகளும் செய்வதாகக் காணப்படவில்லை. ஆயினும் அவ்விதமாய் ஊர்வதைப் பாம்புகள் அதிவேகமாய்ச் செய்கின்றன என்று சொல்வதேயன்றிப் பிறிதொரு பெற்றியாமென்று சொல்வதற்கு இடமில்லை. பாம்பு ஓடுகின்றதென்று சொல்வாரேயன்றி ஊர்கின்றதென்று சொல்வாரில்லை.

ஆதியிலே கடவுள் உண்டாக்கிவிட்ட முதற் பெண்ணை அக்கடவுளின் சொற்கேளாதபடி அணுப்பி விட்டது இப்பாம்பே யென்றும், அதனுல் "நீ மண் மேல் ஊர்ந்து மண்ணை உண்பாய்" என்று அக்கடவுள் சபித்தாரென்றும் சில மார்க்கத்தவர் கூறுகின்றனர். அது, சோறு உண்பவனை "நீ சோறு உண்பாய்" என் றும், வழிநடப்பவனை "நீ வழிநடப்பாய்" என்றும், நித்திரை செய்பவனை "நீ நித்திரைசெய்வாய்" என் றும், வெயர்வை ஒழுக வேலைசெய்பவனை "நீ வெயர் வை ஒழுக வேலைசெய்வாய்" என்றும், பிரசவத் துய ருறுவா ளொருத்தியை "நீ பிரசவத்துயருறுவாய்" என்றும் சபிக்கும் விவேகமில்லாதான் கூற்றுக்கே ஒப் பாகும். பாம்புகள் சாபத்தினுலேதான் ஊர்கின்றனவெ னின் சாபத்தை அடைதற்கு முன் நடக்கவேணும் பறக் கவேணும் தக்க உடம்புடையனவாயிருத்தல் வேண்டும்.

பாம்புகளின் தோல்கள் மற்சங்களுக்கு இருத்தல் போலச் செதிள்கள் நிறைந்தனவாயிருக்கின்றன. அத னுல் அவைகள் வருத்தமின்றிக் கல் முள் முதலியவை கள் உள்ளவழியால் ஊர்ந்து செல்லவும் மரங்களில் ஏற வும் வல்லனவாயிருக்கின்றன. இரண்டாகப் பிளவுபட்ட மெல்லிய நீண்ட நாக்கினுலே பாம்பானது பரிசித்து அறிகின்றது. அதன் வாய்க்குள் உட்புறமாக வளைந்த பற்கள் இருக்கின்றன. நச்சுப்பைகளோடு சேர்ந்து உட்டுளை பொருந்திய அப்பற்களின் வழியால் பாம்பு கடிக்கும்போது நஞ்சு பாய்ந்து கடிக்கப்பட்ட காயத்தி

னுட் சென்று இரத்தத்தோடு கலந்து உடம்பெங்குஞ் செறிகின்றது. இந்த நஞ்சுக்குப் பாஷாணமே தக்க மருந்தாம். சில பாம்புகளின் நஞ்சு மணி மந்திர ஔடதங்களாற் சாந்தியாகாது கொன்றுவிடும்.

பாம்புகள், உணவை மென்று தின்னுதற் கேற்ற பற்களையுடையனவல்ல; மிக அகன்று விரியக்கூடிய தோலையுடைய வாயினாலே தவளை முதலிய உணவை அதுக்கிப் பெரும்பாலும் இறக்குமுன் உயிரோடுதானே அவைகளை முழுமையாக விழுங்கிவிடுகின்றன. மலைப் பாம்பு என்று சொல்லப்படும் பெரும்பாம்புகள் மாடு மான் முதலியவைகளைப் பிடித்து விழுங்கத்தக்க வலிமையும் பருமையும் நீளமும் உடையன. அவைகள் அவ்விரைகளைக் கண்டமாத்திரத்தே ஓர் மரத்தைத் தம்முடைய வாலினாற் சுற்றிக்கொண்டு விரைந்து பாய்ந்து அவைகளின் உடம்புகளை மூன்று நான்கு சுற்றுக்களாகத் தம்முடம்பினாற் சுற்றி எலும்புகள் முரியும்படி இறுக்கிக் கொன்று முழு உடம்பையும் ஒரேமுறையில் விழுங்கி அவ்வுணவு சீரணமாகுமளவும் ஓரிடத்திற்றானே படுத்துக்கொள்ளுகின்றன.

நச்சுப்பாம்புகளைக் குறித்து யாவருஞ் சாவதானமாக இருத்தல் வேண்டும். அவற்றிற்கு அஞ்சாதாரில்லை. இக்கருத்துப்பற்றியே ஔவையாரும் "அரவமாட்டேல்" என்றருளிச்செய்தார். ஆதலினாலே இருளிலே

விளக்கின்றி வெளியே போதலும் கட்டில்முதலியவற்றிலன்றி நிலத்திலே சயனித்தலும் ஆகாவாம். "பாம்பொடுபழகேல்" பால்கொடுத்தவருக்கும் விஷத்தைக்கொடுக்கும் பாம்பு போல்வாருடனே நீ ஒருபோதுஞ் சகவாசஞ் செய்யாதே.

**பரீக்ஷை வினா.** பாப்புகளின் பேதங்களெவை? பகைவர் எதிர்க்கும்போது அவைகள் எப்படித் தம்மைப் பாதுகாக்கின்றன? பாம்புகளின் தன்மைகளைச் சொல்லுக? பாம்பைப்பற்றிய சரித்திரம் என்ன? அதுமெய்யானதா? ஏன்? பாம்புகளைப் பற்றி வேறு என்ன அறிவாய்? ஔவையார் என்ன சொன்னார்?

---

## ௩௩. விநாயகக்கடவுள்.

| | |
|---|---|
| தடை - இடையூறு. | உக்கிரம் - அதிககோபம். |
| பசு - கட்டுண்ட ஆன்மா | சிட்டர் - நல்லோர். |
| அங்கம் - அவயவம், உறுப்பு. | நிர்விக்கினமாய் - இடையூறின்றி. |
| வியாபித்தல் - கலத்தல். | முற்றுதல் - நிறைவேறுதல். |
| நித்திய ஆனந்தம்— | எப்பொழுதும் இன்பம். |

சைவசமயிகள் எந்த எந்தக் காரியங்களையுஞ் செய்யத் தொடங்கும்போது, தாம் தொடங்கும் காரியம் இடையிலே தடைபடாமற் செவ்வையாக விரைவிற் சித்தியாகும்படி அருள் செய்யவேண்டு மென்று விநாயகக்கடவுளை அன்போடு நினைத்து வழிபட்டுக்கொள்வது வழக்கமாகும்.

விநாயகக்கடவுள் சிவபெருமானுடைய மூத்தபிள்ளை என்பதுபற்றி அவருக்குப் பிள்ளையாரென்னுந் திருநாமமும் வழங்கப்படுகின்றது. சிவபெருமான் உருவம் இல்லாதவர். அவருக்குப் பிறப்பும் இல்லை. இறப்பு மில்லை.

அவர் உயர்வும் ஒப்பும் இல்லாதவர். அவர் சர்வலோகத்துக்கும் ஒரே நாயகர். நித்தியானந்த முடையவர். ஆயினும், உருவமில்லாதவரை நினைத்து வழிபடுதல் பசுக்களாகிய எங்களால் இயலாததே யாகையால் நாங்கள் தம்மை அன்போடு நினைத்து வழிபட்டு உய்யும் பொருட்டாகவே அவர் திருவுருவங்களை யுடையராய் விளங்குவார்.

சிவபெருமான், மூன்று கண், நான்கு புயம், கரிய திருக்கண்டம் முதலிய அங்கங்களை யுடைய திருவுருவத்தில் வியாபித்து நின்று படைத்தல் முதலிய தொழில்களை யெல்லாஞ் செய்து ஆன்மாக்களுக்கு அருளுதலேயன்றி, மூன்றுகண்பொருந்திய யானைமுகம் முதலிய அங்கங்களையுடைய திருவுருவத்திலே வியாபித்து நின்று விநாயகக்கடவு ளென்னுந் திருநாமத்தை உடையவராகித் தம்முடைய அடியவர்கள் நினைத்த காரியங்களை இனிதுமுடித்தலையே விசேடமாகக் கொண்டும், உக்கிரமாகிய திருவுருவங்களிலே வியாபித்து நின்று வைரவக்கடவுள் வீரபத்திரக்கடவுள் என்னுந் திருநாமங்களை உடையவராகித் துட்டர்களைத் தண்டித்தலையே விசேடமாகக் கொண்டும், தண்ணளியான ஆறுமுக முதலிய அங்கங்களையுடைய திருவுருவத்திலே வியாபித்துநின்று சுப்பிரமணியக்கடவுளென்னுந் திருநாமத்தை உடையவராகிச் சிட்டர்களைக் காத்தலையே விசேடமாகக்கொண்டும், ஆன்மாக்களுக்கு அருள்செய்வார். இப்படியாத

ல்பற்றியே விநாயகக்கடவுள் முதலியோரைச் சிவபெரு மானுடைய புத்திரர்களென்று வழங்குதலுளதாயிற்று.

ஆதலால் நாமெல்லாம் எந்தக்கருமத்தைத் தொடங்கும்போதும் அது நிர்விக்கினமாய் எளிதில் முற்றுறும்பொருட்டு விநாயகக்கடவுளை அன்போடு தியானித்துத் துதித்து வணங்கிக்கொள்ளல் வேண்டும்.

**பரீக்ஷைவினு.** சைவசமயிகள் ஒருகாரியத்தைச் செய்யத் தொடங்கும்போது எக்கடவுளை வழிபடுவது வழக்கம்? அப்படி வழிபடுவதின் நோக்கம் என்ன? விநாயகக்கடவுளுக்குப் பிள்ளையாரென்னுந் திருநாமம் எதுபற்றி வழங்கப்படுகின்றது? சிவபெருமான் எவ்வகையானவர்? அவர் திருவுருவங்களைக்கொண்டு விளங்குதல் எதன்பொருட்டு? அவருடைய திருவுருவங்களைப்பற்றியும் அவ்வுருவங்களின் தொழில்களைப் பற்றியும் என்ன சொல்லப்பட்டிருக்கிறது?

---

## நுச. தாய்தந்தையர்.

அபரக்கிரியை - பின்செய்யுஞ் செய்கை.
உத்தேசித்தல் - குறித்தல்.
புறங்கூறல் - தூற்றுதல்.
தகனம் - சுடுதல்.
இம்சித்தல் - தண்டித்தல்.

நம்மை அன்போடு பெற்றுவளர்த்து, நமக்கு வந்த வியாதிகளைத் தகுந்த வைத்தியர்களைக்கொண்டு மாற்றுவித்து, இனிய உணவுகளையும் உடைகளையுந் தந்து, நமக்காகத் தாம் வெகு பிரயாசப்பட்டதேயன்றி, எவ்வளவோ பொருளையுஞ் செலவிட்டு, நம்மைக் காத்

தவர்களாகிய நம்முடைய தாய்தந்தையர்களை நாம் எப்பொழுதும் அன்போடு வழிபடுதல் வேண்டும். அவர்களுடைய சொல்லைத் தட்டலாகாது.

நம்முடைய தாய்தந்தையர்கள் நமக்குச் செய்த நன்மைக்கு முழுதும் பதில்செய்து முடித்தல் ஒருபொழுதும் நம்மாலியலாது. ஆயினும் நாம் எப்பொழுதும் அவர் செய்த நன்றியை மறவாது மெய்யன்போடு அவரை வழிபட்டுவருதல் வேண்டும். அவர்கள் வயோதிகரான காலத்திலே அவர்களுக்கு வேண்டிய இனிய போசனவகைகளைத் தேடிக் கொடுத்தலினாலும், வியாதிகளைத் தீர்த்தற்குத் தகுந்த வைத்தியர்களைத் தேடிக் காட்டி மருந்துகள் வாங்கிக்கொடுத்தலினாலும், மற்றும் வேண்டிய வேண்டிய உதவிகளைச் செய்தலினாலும் அவரை மகிழ்வித்தல் வேண்டும்.

நம்முடைய தாயாராவது தந்தையாராவது இறந்த காலங்களிலே அவர்கள் மறுமையின்பத்தைப் பெறும் பொருட்டு வேண்டிய அபரக்கிரியைகளை அறிவும் ஒழுக்கமுமுடைய குருக்கண்மாரைக்கொண்டு விதிப்படி ஒழுங்காகச் செய்வித்தல் வேண்டும். வருஷந்தோறும் அவர்களிறந்த மாசத்தில் இறந்ததிதிவரும் நாளிலே அவர்களை உத்தேசித்து விதிப்படி சிராத்தஞ் செய்துவரல் வேண்டும். நாம் செய்யுஞ் சிராத்தத்தை அவர்கள் நேரே வந்து கண்டு ஏற்காவிடினும், உயிர்க்குயிராகிய கடவுள் கண்டு ஏற்று அதன் பயனை அவர்களுக்குக் கொடுப்பார்.

தற்காலத்திலே சிலர் தம்முடைய தாய்தந்தையர்கள் வியாதியாளராய் வயோதிகராய் வருந்துங் காலங்களிலே அவர்களுக்கு வேண்டிய ஆகாரமாவது கொடுக்க மனம் பொருந்தாதவர்களாய், தாமும் பெண்டிர் பிள்ளைகளும் செவ்வையாக உண்டு உடுத்து வாழ்ந்து கொண்டு அவர்களிறந்த காலங்களிலே பிறர் தம்மை மதிக்கும்பொருட்டு அலங்காரமான தண்டிகைகள் கட்டி அவைகளிலே அவர்கள் உடம்பைவைத்துப் பல பறைவாத்தியத்தோடு தெருவுலாவிச் சந்திகடோறும் நிறுத்தி நிறுத்தி முழக்குவித்துக் கொண்டுபோய்த் தகனம்பண்ணுகிறார்கள்.

சிலர் தமது தந்தையரினும் தாம் அதிக விவேகமுடையவரென்று அவர்களுக்குப் புத்திசொல்லவும், அவர்வாக்கைத் தட்டிப் பேசவும், அவரைப் புறங் கூறவுந் தலைப்படுகின்றார்கள். அதுமட்டோ தாயைத் தந்தையை வைது உறுக்கி இம்சிக்கவும் தலைப்படுகின்றார்கள். இப்படிப்பட்ட பாவிகள் நரகங்களிலே எண்ணில்லாத காலங் கிடந்து வருந்துவார்களென்பது உண்மை நூற்றுணிபு.

**பரீக்ஷவினா.** தாய்தந்தையர் நமக்கு யாது செய்திருக்கிறார்கள்? அவரை நாம் எவ்விதமாக நடத்தவேண்டும்? அவருடைய வயோதிபத்தில் நாம் யாது செய்தல்வேண்டும்? அவர் இறந்தபின் நாம் யாது செய்யவேண்டும்? சிலர் தாய்தந்தையரை எவ்விதமாக நடத்துகிறார்கள்? அப்படி நடத்தும் பாவிகள் எவ்விதமாக வருந்துவார்கள்?

---

## நரு. தேசங்கள்.

| | |
|---|---|
| நூதனம் - புதுமை. | செழிப்பு - வளமிகுதி. |
| கோடி - முனை. | அன்னியதேசம் - பிறநாடு. |
| அண்டவடிவு-முட்டைவடிவம். | நாகரிகம் - சீர்திருத்தம். |

பூமியிலே பற்பல தேசங்கள் உள்ளனவாயினும் நம்மவர்கள் முன்பு நன்றாயறிந்திருந்த தேசங்கள் சிலவே. ஆசியாவின் வடபாகத்துத் தேசங்களும் அமரிக்காவும் ஆபிரிக்காவின் தென்பக்கமும் சமுத்திரத்திற் பலதீவுகளும் இற்றைக்கு முந்நூற்றிருபது வருஷங்களுக்கு முன்னே தான் நூதனமாய்க் காணப்பட்டன. காலந்தோறும் புதிய தேசங்கள் கண்டுபிடிக்கப்படுகின்றன. பூமியின் வடகோடி தென்கோடிகள் இன்னும் முழுதுங் காணப்படவில்லை.

பூமியிலே தேசங்கள் போலவே ஜாதிகளும் பாஷைகளும் பற்பலவிதங்களாம். ஆசியாக்கண்டத்திலே பழைமையாயிருந்த ஜாதியார் சீனரும் இந்துக்களுமே. பாஷைகளுள்ளே சம்ஸ்கிருதமும் அரபியும் சீனமும் எபிரேயமும் பழைய பாஷைகளாம். ஐரோப்பாவிற் பெரும்பாலாரும் ஆசியாவின் மேல்பாலாரும் இந்துக்களும் ஆபிரிக்காவின் வடபாலாரும் அண்டவடிவான முகங்களையும் அழகான கண்களையும் நல்ல உருவமைந்த மூக்குக்களையுமுடையர். ஆசியாவின் மத்திய கீழ்வடபாகங்களில் வாழ்பவர்கள் மஞ்சள்நிறமும் நீண்ட கண்களும் சிறிய நெற்றிகளும் உடையவர்கள். இவர்களெல்லாம் சீதள

உஷ்ண வகையாலும் வேற்றுச்சாதியில் விவாகஞ்செய்தலினாலும் இன்னும் பற்பல உட்பிரிவுகளை யுடையவர்களாயிருக்கின்றார்கள்.

மனிதர் ஜாதியில் வேறுபட்டிருத்தல் போலவே ஒழுக்கத்திலுங் குணத்திலும் வேறுபட்டிருக்கிறார்கள். சிலர் மாமிசமே புசிப்பார். சிலர் மாமிசமும் தாவரபதார்த்தமும் புசிப்பார். சிலர் தாவரபதார்த்தமே புசிப்பார். சில தீவுகளிலுள்ள காட்டுமனுஷர் மனிதமாமிசமே புசிப்பார். சீதளபூமியில் வசிப்பவர் உஷ்ணத்தைத் தருகின்ற கம்பளி சட்டை முதலியவற்றைத் தரிப்பார். உஷ்ணபூமியில் வாழ்பவர்கள் பெரும்பாலுங் கம்பளி முதலியவற்றைத்தரியார்.

குடிகள் நெருங்கிய செழிப்பில்லாத தேசங்களிலுள்ளவர்கள் சீவனத்தின்பொருட்டு வருந்திச் சம்பாதிக்குங் குணமுடையவர்கள். செழிப்பான நிலங்களில் நெருக்கமின்றி வாழுபவர்கள் சீவனவழியை இலகுவிற்பெற்றுக் கொள்ளுதலால் சோம்பலான சுகவாழ்வை விரும்புங் குணமுடையவர்கள். கொடுங்கோலரசருக்குக்கீழே நெடுங்காலம் அடங்கியிருக்குஞ் சனங்களிடத்திலே தைரியமும் உண்மையுமிருக்கமாட்டா. அன்னிய தேசங்களிலே போய்ப்போய்ப் பழகினவர்கள் அறிவிலும் நாகரிகத்திலும் மிகச் சிறந்தவராவர்.

**பரீக்ஷவினா.** அமரிக்கா முதலிய தேசங்கள் எப்போதுகாணப்பட்டன? ஆசியாக்கண்டத்தின் பழமையான்ஜாதியார்

யார்? பழைய பாஷைகள் எவை? அண்டவடிவான முகங்களுடையவர் யார்? மஞ்சள் நிறம் உள்ளவர்கள் யார்? மனிதர் எதனுல் வேற்றுமையுள்ளவர்களாயிருக்கிருர்கள்? மனுஷரின் ஊண் உடை குணம் எவ்விதமாக வேற்றுமைப்படுகின்றன? அறிவு நாகரிகத்திற் சிறந்தவர்யார்?

## ௩௬. பெரியபுராணம்.

வியத்தல் - புகழ்தல். சந்நிதானம் - முன்னிலை.
பிரார்த்தித்தல்—வேண்டிக்கொள்ளல். வீணுள் - பயனில்லாதகாலம்.

முற்காலத்திருந்த தமிழரசராகிய அநபாய சோழமகாராசர் என்பவர் சமணப்புலவர்களால் வாசித்து விரித்துரைக்கப்படுகிற சீவகசிந்தாமணி என்னும் நூலை மகிழ்ச்யோடு கேட்டுவந்தார். அதுகண்ட அவர் மந்திரியாராகிய சேக்கிழார்நாயனுர் என்பவர் அவரைநோக்கி ''மகாராசாவே! நீர் சைவசமயியாயிருந்தும் இம்மையினும் மறுமையினும் இன்பத்தைத் தருகின்ற மேலான சிவசரித்திரங்களைக் கேளாமல் அந்நியசமயிகளுடைய பயனற்ற கதையைக்கேட்டு வாழ்நாளை வீணுளாக்குகின்றீரே'' என்ருர். அரசர்''நல்ல சிவகதை எது?'' என்ருர். மந்திரியார் ''மகாராசாவே! முற்காலத்திலே திருவாரூரிலே சிவபெருமானுடைய அருளினுலே சுந்தரமூர்த்திநாயனுர் திருத்தொண்டத்தொகை என்னுந் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடியருளினுர். திருநாரையூரிற் பொல்லாப்பிள்ளையாரிடத்தே எல்லா நூல்களையும் படித்தறிந்த நம்பியாண்டார் நம்பி என்னும் பிராம

ணப்பிள்ளை அப்பதிகத்துக்கு அப்பிள்ளையார் தாமே பொருள் சொல்லக் கேட்டு அப்பதிகத்திற் சுட்டப்பட்ட ஒவ்வொரு அடியவர்களுடைய வரலாறுகளையுஞ் சுருக்கி விளக்குகிற ஒரு அந்தாதி பாடினார். அதற்கு நம்பியாண்டார்நம்பியந்தாதி என்பது பெயர். அதனைப் பெரியோரெல்லாம் மிக வியந்துகொண்டார்கள்" என்றார். அரசர் "அவ்வந்தாதியைப் படித்துப் பொருள் சொல்லும்" என்றார். நாயனார் படித்துப் பொருள்சொன்னார். அரசர் மிகமகிழ்ந்து "இதனை விரித்து விளக்கி ஒரு காப்பியமாகப் பாடித் தாரும்" என்று நாயனார் கருத்தின்படி வேண்டியபொருளுங் கொடுத்துவிட்டார்.

நாயனார் சிதம்பரத்தையடைந்து சிவகங்கையிலே முழுகிச் சபாநாயகரைத் தரிசித்துவணங்கிப் பிரார்த்திக்க, அப்பொழுது சபாநாயகருடைய அருளினாலே "அன்பனே நீ 'உலகெலா முணர்ந் தோதற் கரியவன்' என்று தொடங்கிப் பாடு" என்கிற ஒரு திருவாக்கு எல்லாருங் கேட்கச் சந்நிதானத்தில் எழுந்தது. அதனைக் கேட்டுத் தில்லைவாழந்தணரும் பிறரும் மிகமகிழ்ந்து புகழ, நாயனார் அன்றுதொடங்கிப் பாடிச் சிலகாலத்திலே முடித்தார். அதற்குப் பெரியபுராணமென்று பெயர்.

அடிக்கடி ஆள்விட்டு விசாரித்துக் காத்திருந்த அரசர் அவர் பாடிமுடித்தமையை அறிந்தவுடனே சிதம்பரத்தையடைந்து சபாநாயகரை வணங்கிப் பற்பல

வித்துவான்களையும் வருவித்து ஒரு சித்திரைமாசத்துத் திருவாதிரை நக்ஷத்திரத்திலே, அப்புராணத்தைச் சந்நிதானத்திற்றனே வாசித்துப் பொருள் சொல்லும்படி நாயனாரை வேண்டிக்கொண்டார். நாயனார் அச்சுபமுகூர்த்தத்திலே படித்துப் பொருள்சொல்ல ஆரம்பித்து அடுத்த சித்திரைமாதத்துத் திருவாதிரை நக்ஷத்திரத்தன்று முடித்தார். எல்லாருங் கிரமமாகக் கேட்டுப் பெருமகிழ்ச்சியோடு வியந்துகொண்டார்கள். புராணம் முற்றுப்பெற்றபின் அப்புராணமெழுதிய திருவேட்டைப் பூசித்து, அதனையும் நாயனாரையும் யானையின்மேலேற்றி, அரசர் தாமுங்கூடவேறி, இரண்டுகைகளினாலும் வெண்சாமரம்வீசி, வீதியை வலஞ்செய்து வந்து, யானையினின்று மிறங்கிக் கனகசபையிலேசென்று திருமுறையைச் சந்நிதானத்திலே வைத்துப் பூசித்தார்.

பின்பு அரசர் நாயனாருக்குத் தொண்டர்சீர்பரவுவார் என்று பெயர்கொடுத்து மண்டபத்திலிருத்தி, அவரை விழுந்துவணங்கித் தம்மிச்சைப்படி யொழுகுமாறுவிட்டு, நாயனாருதம்பியாராகிய பாலறுவாயரை அழைப்பித்துத் தமக்கு மந்திரியாராக வைத்துக்கொண்டார். நாயனார் சிதம்பரத்திற்றனே சிலகாலமிருந்து சிவபதத்தையடைந்தார்.

இப்பெரியபுராணமானது திருத்தொண்டர்புராணமென்றும் வழங்கப்படும். இதிலே சுந்தரமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் திருஞானசம்பந்தமூர்த்தி நாய

ஞர் என்னுஞ் சமயகுரவராகிய தனியடியார் மூவரும், திருநீலகண்ட நாயனர் முதலிய தனியடியார்கள் அறுபதின்மரும், தில்லைவாழந்தணர் முதலிய தொகையடியார்கள் ஒன்பதின்மரும் ஆகிய இவர்களுடைய பெருமைகளும், இவர்களுக்குச் சிவபெருமான் அருளிச்செய்த முறைமைகளும்மிகவிரித்துச்சொல்லப்பட்டன. இப் பெரியபுராணத்தை அன்போடு படிப்பவர்களுங் கேட்பவர்களும் விசேஷ நன்மைகளைப் பெற்றுக்கொள்ளுவார்கள்.

**பரீக்ஷைவினு.** *அநபாயசோழமகாராசர் எந்நூலை வாசிப்பித்துக் கேட்டுவந்தார்? சேக்கிழார்நாயனர் யார்? அவர் அரசருக்கு யாதுகூறினர்? அரசர் பின்யாது சொன்னர்? பெரியபுராணம் யாராற்பாடப்பட்டது? எப்படித் தொடங்கிப் பாடப்பட்டது? அதை வாசித்துப்பொருள்சொல்ல எவ்வளவுகாலஞ்சென்றது? முடிவில் யாது நடந்தது? சேக்கிழார்நாயனர் பின் என்ன செய்தார்? பெரியபுராணத்தின் மறுபெயர் யாது? அதில் சொல்லப்பட்டிருப்பது என்ன? அதனைப் படிப்போர் கேட்போர் எய்தும் பயன் யாது?*

---

## ௩எ. கோபம்.

*மனக்கிளர்ச்சி - உள்ளஎழுச்சி. பரிதாபம் - மனவருத்தம்.*
*நேரிடுதல் - சம்பவித்தல். சிதைதல் - அழிதல்.*

கோபமாவது சீவர்களுக்குத் தாம் விரும்பியது பிறராலே தடுக்கப்படும்பொழுது அவரை இலக்காக்கி எழுகின்ற மனக்கிளர்ச்சியாம். தாம் விரும்பியதைத்

தடைசெய்த பிறர் தம்மினும் வலியவராயின் அவரை இலக்காக்கி யெழுந்த கோபம் பெரும்பாலும் நிலைப் படாது துன்பமேயாய் முடியும். இனி அவர் தம்மோடு ஒத்தவராய், அன்றித் தம்மின் மெலியவராய்த் தான் இருப்பினும் அவரோடு தொடர்புடைய வேறு சிலரது உதவியைக் கொண்டு தம்மின் வலியராய் வருதலுங் கூடுமாதலின் அவரை இலக்காக்கி எழுந்த கோபமும் அப்படியே துன்பமாய் முடிதலுங் கூடும். எப்படியும் கோபம் இம்மையிலே இன்பத்தை விளைவித்தல் அருமையாம். ஒரோவிடத்து இன்பத்தை விளைவிப்பினும் பழி நீங்காதாகும்.

கோபம் உண்டானபொழுதே மனங்கலங்க நல்லறிவு அழிந்துவிடும். அழியவே இது செய்யத்தக்கது, இது செய்யத்தகாதது என்றும், இவர் குற்றஞ் செய்தவர், இவர் குற்றஞ்செய்யாதவர் என்றும், இவர் யோக்கியர், இவர் அயோக்கியர் என்றும் விளங்காமையினாலே தம்மைச்சார்ந்து ஆரார் எவ்வெவற்றைச் சொன்னாலும், அவ்வவற்றை நம்பிக்கொள்ளுதலும், ஆராருக்கும் எந்த எந்தத் தீங்குகளையுஞ் செய்தலும் நேரிடும். நேரிடவே சிவகருணை யென்னும் பெரிய புண்ணியஞ் சிதைய இம்மையிலே அரசராலேதண்டிக்கப்படுதலும் மறுமையில் நரகத்துன்பத்தை அனுபவித்தலும் தப்பாது கூடும். ஆதலாற் கோபம் பழியையும் பாவத்தையுமே தருவதென்று துணிந்துகொண்டு, யாவருந் தம்முடையமனத்திலே கோபமென்னுந்துர்க்குணந் தோன்றவிடாது காத்துக்கொள்ளுதல் வேண்டும்.

தம்மேலே யாவனொருவன் குற்றஞ் சொன்னானாயின் அக்குற்றந் தம்மிடத்தி லுள்ளதா இல்லையா என்று ஆராய்தல்வேண்டும். உள்ளதாயின் அதனைத்திருத்திக்கொள்வதேயன்றி நாம் திருந்துதற்கு இவன் காரணமாய் நின்றானேயென்று அவனை வியந்துகொள்ளுதலும் வேண்டும். அக்குற்றம் தம்மிடத்து இல்லையாயின் "சந்திரனைப் பார்த்துநின்று நாய்குலைத்தபோதிலென்ன தாழ்ச்சிதானே" என்று மேலோர் சொல்லியபடி இவன் சொன்னதனால் நமக்கு யாதுங் குறையில்லையென்று தம்மனம் ஆறுதலேயன்றி இவன் இங்ஙனம் நம்மை வைததனால் நரகத்துக் காளானானே என்று மனம் வருந்துதலும் வேண்டும். இதுவே அறிவுடையோர்க்கு அழகு.

தமக்குப் பிறர் செய்த எவ்வகைத் தீமைகளையும் பொருட்படுத்தாது அப்பொழுதே மறந்துவிடுதலும், சமயம்பார்த்து அவருக்குத் தாம் நன்மை செய்துவிடுதலுமே பெரிய வெட்கத்தையும் பரிதாபத்தையும் விளைவித்தலினாலே அவருக்குத் தக்க தண்டமாய் முடியும். அதனால் அவர் திருந்திப் பின்னொருவருக்கும் தீங்கு செய்யாது விடுதலுங் கூடும்.

**பரீக்ஷவினா.** இப்பாடத்தின் பொழிப்பைச் சொல்லு.

---

## ௩௮. சைவகுரவர்.

சித்தாந்த உபதேசம் - ஆகமபோதனை. திருவவதாரஞ்செய்தல் - பிறத்தல்.
கிருபாவசம் - அருளின்வயம். அற்புதம் - ஆச்சரியம்.

சைவகுரவர், சந்தானகுரவருஞ் சமயகுரவருமென இருவகைப்படுவர்.

சந்தானகுரவராவார் சிவபெருமானிடத்தி லிருந்து சித்தாந்த உபதேசத்தைப் பெற்றுக்கொண்டு தம்மையடைந்த நன்மாணக்கர்க்குத் தாம் உபதேசித்தருளிய தலையாசிரியரும் அவர்மாணக்கர் அவர்மாணக்கராய் வழிவழியாய்வந்த ஆசாரியர்களுமாம்.

சந்தானகுரவருள்ளே தலைவராவார் சிவபெருமானது அருள்பெற்ற திருநந்திதேவர்; அவர்மாணக்கர் சனற்குமார மகாமுனிவர்; அவர்மாணக்கர் சத்தியஞானதரிசனிகள்; அவர்மாணக்கர் பரஞ்சோதிமகாமுனிவர்; அவர் கிருபாவசத்தினாலே திருக்கைலாசகிரியினின்று நீங்கித் தமிழ்நாட்டிற்கு எழுந்தருளியபோது அவரிடத்திலே ஞானோபதேசம்பெற்ற மாணக்கர் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்த வேளாளராகிய மெய்கண்டதேவர் என்னுங் காரணப்பெயரையுடைய சுவேதவனப்பெருமாள், அவர்மாணக்கர் நாற்பத்தொன்பதின்மருள்ளே தலைவர் திருத்துறையூரில் எழுந்தருளியிருந்த ஆதிசைவராகிய சகலாகமபண்டிதரென்னுங் காரணப்பெயரையுடைய அருணந்திசிவாசாரியர்; அவர்

மாணுக்கர் திருப்பெண்ணுகடத்திலே திருவவதாரஞ் செய்து சிதம்பரத்தைச்சார்ந்த திருக்களாஞ்சேரியில் எழுந்தருளி யிருந்த மறைஞானசம்பந்தசிவாசாரியர்; அவர்மாணுக்கர் தில்லைவாழந்தணரில் ஒருவராய் அந்தத் திருப்பதியைச் சார்ந்த கொற்றவன்குடியில் எழுந்தருளியிருந்த உமாபதிசிவாசாரியர். இப்படியே அடிப்பட்டு மாணுக்க பரம்பரையில் வந்தவர்கள் சந்தானகுரவரென்று சொல்லப்படுவர்.

இனிச் சமயகுரவராவார் சிவபெருமானை மெய்யன்போடு வழிபட்டு அவரது திருவருளை விசேஷமாகப் பெற்று அவர்மேலே திருவருட்பாக்களைப் பாடிப் பல அற்புதங்களையுஞ் செய்தலினுலே புறச்சமயங்கள் குன்றச் சைவசமயமே மெய்ச்சமயமென்பது விளங்க உலகத்தாருக்குக் காட்டியருளிய திருஞானசம்பந்தசுவாமி திருநாவுக்கரசுசுவாமி சுந்தரமூர்த்திசுவாமி மாணிக்கவாசகசுவாமி என்னும் நால்வருமாம்.

இவர்களுள்ளே திருஞானசம்பந்தசுவாமி திருநாவுக்கரசுசுவாமி சுந்தரமூர்த்திசுவாமி என்பவர்களுடைய வரலாறு பெரியபுராணத்திலும், மாணிக்கவாசகசுவாமியின் வரலாறு திருவாலவாய்ப்புராணத்தும் ஆதிகைலாசமகாத்மியத்தும் மணிவாக்கியசரித்திரத்தும் திருவாதவூரர்புராணத்தும் விரித்துச் சொல்லப்பட்டன.

மற்றும் மெய்யடியார் பலர் பெரியபுராணத்திலும் பிறநூல்களிலும் வியந்து பேசப்பட்டவராயினும் அவ

ருள் ஒருவர்க்காவது சமயகுரவரென்னும் பெயர் எங்காயினும் வழங்கப்படவேயில்லை. ஆகவே தற்காலத்துச் சிலர் சிற்சில புலவரைச் சமயகுரவரென்றும், அவர் பாடிய கவிகளை அருட்பாக்களென்றும் வழங்குதல் பெருங் குற்றமேயாம் என்பது சிவதருமோத்தர முதலிய உண்மைநூல்களுட்காண்க.

**பரீக்ஷைவினா.** சைவகுரவரெத்தனைவகைப்படுவர்? சந்தானகுரவராவார் யார்? அவரைப்பற்றி என்ன அறிவாய்? சமயகுரவராவார் யார்? திருஞானசம்பந்தசுவாமி, திருநாவுக்கரசுசுவாமி, சுந்தரமூர்த்திசுவாமி, மாணிக்கவாசகசுவாமி என்பவர்களுடையபாடல்களை ஒழிந்த ஏனையபாடல்களை அருட்பா என்று சொல்லலாமா? என்?

---

## ருக. பாரதச்சரித்திரம். 11.

பொறுமை - அழுக்காறு.
பராக்கிரமம் - வீரம்.
இடையூறு - தீங்கு.
பிரதிஞ்ஞை - சபதம்.
சுயம்வரம் - கன்னி தானே நாயகனைத் தெரிந்துகொள்ளல்.

பஞ்சபாண்டவர்கள் இளமைப்பருவம் உடையவர்களாய் இருக்குங் காலத்திலேயே பாண்டுமகாராசன் இறந்துவிட்டான். இறந்தபின்பு பாண்டவர்கள் பெரிய பிதாவாகிய திருதராட்டிரனிடத்திலேயே இருந்து வளர்ந்தார்கள். பாண்டவர்களும் நூற்றுவர்களும் பாட்டனாகிய வீட்டுமரிடத்தும் கிருபாசாரியர் துரோணாசாரியர் என்னும் அந்தணரிடத்தும் வில்வித்தை முதலிய கல்வி கற்பாராயினர். அக்காலத்திற்றானே நூற்றுவர்

கள் பாண்டவர்களுடைய வீரம் கல்வித்திறமை முத லியவற்றைப் பார்த்துப் பொருமைகொள்வாராயினர். துரியோதனன் குந்தியின் முதற்புத்திரனுகிய கன்னனு டைய வீரத்தைப் பார்த்து அவனைத் தனக்குத் துணை வனுகச் சேர்த்துக்கொண்டான். பாண்டவர்களுக்கு இளமைப்பருவம் நீங்கி அரசாளும்பருவம் வந்தவுடனே அவர்களுடைய பராக்கிரமத்தைப் பார்த்துப் பெரியதந் தையாகிய திருதராட்டிரன் இந்திரப்பிரஸ்தம் என்னும் நகரத்தை உண்டாக்கி அதிலேயிருந்து அரசாளும்படி தருமருக்குப் பட்டஞ்சூட்டி இளவரசனுக்கினுன். தரு மபுத்திரர் மிகுந்த ஆண்மை ஊக்கம் நடுவுநிலைமை உண் மை கபடமின்மை பொறுமை முதலிய பல நற்குணங்க ளும் நிறைந்தவராய் விளங்கினுர்.

பாண்டவர்களும் நூற்றுவர்களும் இளம்பிராயத் திற்றுனே பெரும்பகை உடையரானுர்கள். அவருள் ளே, துரியோதனன் வீமனைக் கயிற்றுற் கட்டிக் கங்கை யில் விடுதல் முதலிய பல தீங்குகளைச் செய்வித்தபோ தும் அவனே அவற்றுள் ஒன்றுலேனும் இடையூறு அடைந்தானல்லன்.

பின்னெருகாலத்தில் துரியோதனன் பாண்டவர் களைக் கொன்றுவிடும் நோக்கமாக ஓர் அரக்குமாளிகை யைக் கட்டுவித்து, அதிலே அவர்களை வசிக்கும்படி செய்தான். அவ்வரலாற்றை வீமனறிந்து தானே அம் மாளிகையை எரித்துவிட்டுத் தருமாதியரோடு ஓர்

வனத்திற் சேர்ந்தான். துரியோதன ஞதியோர் "மாளிகையிற்றுனே ஐவருந் தாயும் இறந்தனர்" என்று எண்ணியிருந்தார்கள்.

பின்பு ஐவரும் பிராமணவேடம்பூண்டு வேத்திரகிய நகரத்தில் வசிக்குங்காலத்திலே திரௌபதியினுடைய சுயம்வரத்தைக் கேள்வியுற்று அச்சபையிற் போயிருந்தார்கள். அங்கே குறிக்கப்பட்ட வில்லை வளைத்து அம்புதொடுத்துக் குறித்த இலக்கை விழுத்துதல் எவராலும் இயலாததாகவும் அருச்சுனன் அதுசெய்து மணமாலை சூட்டப்பெற்றுன்.

சில காலங்களின் பின்னே தருமர் இராசசூயயாகஞ்செய்து சகல செல்வங்களையும் பெற்று வாழுதலைத் துரியோதனன் கண்டு பொறுமை கொண்டு, சகுனி முதலியோரோடு ஆலோசித்து ஒரு மண்டபங் கட்டுவித்து அதைப் பார்த்தற்கென்று பாண்டவர்களை அழைப்பித்துச் சூதாடுவித்து வென்று அவர்களுடைய நாடுகளையுஞ் செல்வங்களையும் அபகரித்துக்கொண்டு, காட்டிலே பன்னிரண்டு வருஷமும் நாட்டிலே ஒருவரும் அறியாதபடி ஒருவருஷமும் இருந்து வந்தபின்பு அவர்களுடைய நாடுகளைக் கொடுப்பதாக வாக்குச்செய்தான்.

அவர்கள் அப்படியே வாசஞ்செய்து முடித்துவந்தபின்பு தம்புரோகிதராகிய உலூகமுனிவரைத் துரியோதனனிடத்தில் தூதுவிட்டார்கள். அவனே அவர்களுடைய நாட்டைக் கொடுக்க உடன்படாது மறுத்துவிட்

டான். பின்பு அவன் திருதராட்டிரனேடு ஆலோசித்து தம் புரோகிதராகிய சஞ்சயமுனிவரை அனுப்ப, அவர் போய் ஐவருக்கும் ஞானத்தைப் போதித்து அவர்களைத் தவஞ்செய்யும்படி ஏவினர். பாண்டவர்களோ அதற்கு உடன்படாது சத்துரு சங்காரஞ்செய்து பிரதிஞ்ஞையை முடிப்பதே தந்துணிபென்று கூறி முனிவரை அனுப்பினர்கள்.

பின்பு பாண்டவர்கள் கிருஷ்ணபிரானைத் துரியோதனனிடம் தூதனுப்பித் தமது நாட்டைக் கொடுக்கும்படி வேண்டினர்கள். துரியோதனனே நாட்டைக் கொடுக்க உடன்படாது போர்செய்ய வரும்படி சொன்னன். பின்பு பாண்டவர்கள் பல அரசர்களையும் படைத்துணையாகக் கொண்டு போர்செய்யத் தொடங்கினர்கள். பதினெட்டுநாள்வரையும் யுத்தம்நடந்தது. துரியோதனாதியோர் யாவரும் போரிலே இறந்துவிட, நாரதர் முதலியோருடைய வேண்டுகோளின்படி தருமர் முடிசூடிச் செங்கோலோச்சி உலகம் மகிழ அறத்தை வளர்த்து அரசியல் நடத்திவந்தார்.

**பரீக்ஷவினு.** இப்பாடத்தின் பொழிப்பைச் சொல்லு.

---

## சo. திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

கூன் - வளைவு.
ஓடம் - மரக்கலம்.
சம்பந்தம் - தொடர்பு.
தரிசித்தல்—பத்தியோடுகாணுதல்.
சாயுச்சியம்- பரமுத்தி.
உலவாக்கிழி - எடுக்க எடுக்கக்குறையாத பொன்முடிச்சு.
எதிரேறுதல்-எதிர்த்துப்போதல்.

இவர் சோழமண்டலத்திலே சீர்காழி யென்னுஞ் சிவஸ்தலத்திலே பிராமணகுலத்திலே சிவபாதவிருதை யரென்பவருக்குப் புத்திரராய்த் திருவவதாரஞ்செய்த வர். அங்ஙனம் திருவவதாரஞ்செய்திருந்த இந்தப் பிள் ளேயார் மூன்றும் வயசிலே ஒருநாள் தமது தந்தையார் ஸ்நானம்பண்ணப் போகும்பொழுது சிவபெருமானு டைய திருவருளினுலே அவரைத் தொடர்ந்துகொண்டு பின்சென்றூர். தந்தையார் திருக்கோயிலினுள் ளிருக் கின்ற தீர்த்தத்தையடைந்து இவரைக் கரையில் வைத் துவிட்டுத் தாம் தீர்த்தத்தினுள்ளே இறங்கி ஸ்நானம் பண்ணும்பொழுது, இப்பிள்ளேயார் கரையிலிருந்து திருக்கோயிலின் சிகரத்தைப்பார்த்து "அம்மே அப்பா" என்று பொருமியழுதார். உடனே சிவபெருமான் பார் வதிதேவியாரோடும் இடபவாகனத்திலேறி வந்தருளித் தேவியாரை நோக்கி "உன்னுடைய முலேப்பாலேக் கறந்து இவனுக்கு ஊட்டு" என்று சொல்லியருளினர். அவர் அப்படியே பாலேப் பொன்வள்ளத்திலே கறந்து சிவஞானத்தைக் குழைத்துக் கையிலே கொடுத்து ஊட் டச் சிவபெருமான் அழுகைதீர்த்து அருள்செய்தார்.

இப்பிள்ளேயார் அவர்களால் ஆளப்பட்டமையி னுலே ஆளுடையபிள்ளேயார் என்னும் பெயரையுஞ் சிவஞானத்தோடு சம்பந்தஞ்செய்தலினுலே திருஞான சம்பந்தமூர்த்தி என்னும் பெயரையும் உடையராயினர். இதனேயறியாத தந்தையார் தங்கருமம் முடித்துக்கொ

ண்டு கரையிலேறிப்பிள்ளையாரைநோக்கி "யாரிடம் பால் குடித்தாய்" என்று கோபிக்கப் பிள்ளையார் ஆகாயத்தே இடபமேல்நின்றசுவாமியையுந் தேவியாரையும் ஒருவிரலினாலே சுட்டிக்காட்டித் "தோடுடைய" என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். அதுகண்ட தந்தையார் பெருமகிழ்ச்சி யுடையராய்ப் பிள்ளையாரோடு திருக்கோயிலினுள்ளே சென்று தரிசனம்பண்ணி வெளியேவந்து இவரைத் தோளிலே வைத்துக்கொண்டு, இவ்வதிசயத்தை யறிந்து வந்து கூடிய பிராமணரும் பிறரும் புகழ்ந்து சூழத் தமது வீட்டையடைந்தார். பின்பு பிள்ளையார் பற்பல தலங்களிலுஞ் சென்று திருப்பதிகங்கள் பாடிப் பல அற்புதங்களினாலும் சைவசமயத்தைத் தாபித்துவந்தார். பதினாறும்வயதிலே தந்தையார் முதலிய பிராமணர்களுடைய கேள்விப்படி திருநல்லூரிலுள்ள நம்பியாண்டார்நம்பியின் புத்திரியை விதிப்படி விவாகஞ் செய்து உடனே அங்குள்ள திருப்பெருமணமென்னுஞ் சிவாலயத்தினுள்ளே சென்று சிவபெருமான் அங்கே காட்டிய சுத்த சோதிவடிவத்தினுள்ளே சிவபெருமானுடைய ஆஞ்ஞையின்படி தாமும் மனைவியாரும் தமது விவாகத்தைத் தரிசிக்க வந்தவர்களெல்லாரோடும் புகுந்து சிவசாயுச்சியத்தை யடைந்தார்.

இவரிடத்திலே விளங்கிய அற்புதங்களாவன:—

(க.)　மூன்றும் வயசிலே உமாதேவியார் பொற்கிண்ணத்திலேகறந்தூட்டிய திருமுலைப்பாலை

உண்டு "தோடுடைய செவியன்" என்னுந் திருப்பதிகம்பாடியது.

(உ.) சிவபெருமா னிடத்திலே பொற்றாளமும், முத்துப் பல்லக்கும், முத்துச் சின்னமும், முத்துக் குடையும், முத்துப்பந்தரும், உலவாக்கிழியும், படிக்காசும் பெற்றது.

(ங.) வேதாரணியத்திலே வேதங்களினாலே பூட்டப்பட்டுத் திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருப்பதிகத்தினாலே திறக்கப்பட்ட திருக்கதவு அடைக்கப் பாடினது.

(ச.) பாலைநிலத்தை நெய்தனிலமாகும்படி பாடினது.

(ரு.) பாண்டியனுக்குக் கூனையுஞ் சுரத்தையும் போக்கினது.

(சா.) சமணர்களெதிரே தேவாரத் திருவேட்டை அக்கினியிலே போட்டுப் பச்சையாக எடுத்தது.

(எ.) வைகையாற்றிலே திருவேட்டைப் போட்டு எதிரேறும்படி செய்தது.

(அ.) புத்தநந்தியுடைய தலையிலே இடியிடிக்கச் செய்தது.

(கூ.) ஆற்றிலே தாமும் அடியார்களு மேறிய ஓடத்தைத் திருப்பதிகத்தினாலேகரைசேர்த்தது.

(க0.) ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கினது.

(கக.) விஷத்தினாலிறந்த செட்டியை உயிர்ப்பித்தது.

(கஉ.) விஷத்தினாலிறந்த பெண்ணினுடைய எலும்பைப் பெண்ணாக்கினது.

**பரீக்ஷவினா.** திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் தந்தையார் யார்? இச்சுவாமிகளது மூன்றாம் வயசில் என்ன விசேஷசங்கதி நடந்தது? ஆளுடையபிள்ளையார் என்னும்பெயரும் திருஞானசம்பந்தமூர்த்தி என்னும் பெயரும் எவ்வெக்காரணங்களினால் இச்சுவாமிகளுக் கிடப்பட்டன? சுவாமிகளது விவாகத்தில் என்ன அற்புதம்நடந்தது? வேறு அவரிடத்தில் விளங்கிய அற்புதங்கள் யாவை?

---

## சுக. திருநாவுக்கரசு சுவாமிகள்.

விதவை - கணவனையிழந்தவள். சின்மயம் — அறிவுவடிவு.
சொப்பனம் - கனவு. மதுரம் — இனிமை.

இவர் திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூரிலே வேளாளர்குலத்திலே புகழனார் என்பவருக்குப் புத்திரராய்த் திருவவதாரஞ் செய்தவர். மருணீக்கியா ரென்னும் பெயர்பெற்ற இவர் சிறு பருவத்திலே பலநூல்களையும் படித்து வல்லவராய்வருநாளிலே தந்தையாருந் தாயாரும் இறந்துவிடத் தமக்கையாராகிய திலகவதியாரோடு இருந்தார். திலகவதியார் தமக்கு விவாகஞ் செய்யும்படி தந்தையாராலே நியமிக்கப்பட்டிருந்த கலிப்பகைநாயனார் யுத்தத்தி லிறந்தமையை அறிந்து தாமும் இறக்கத் துணிந்தும் தம்பியாராகிய இவராலே தடுக்கப்

பட்டு இவரைப் பாதுகாக்கும் பொருட்டு உயிர்தாங்கி விதவைவிரதந் தவறாமல் வீட்டிலேயே யிருந்தார்.

மருணீக்கியார் தருமவிருப்பமுடையராய்த் தண்ணீர்ப்பந்தர் அறச்சாலை முதலியவற்றின் பொருட்டுத் தம் பொருளைச் செலவழித்து இல்வாழ்க்கையிற் புகாமலே துறவுபூண்டு நல்லமார்க்கம் இன்னதென்று தெரியாமையால் சமணருடைய போதனையினாலே அவரது மார்க்கத்திற் புகுந்து அம்மார்க்கநூல்களில் வல்லவராய் மேன்மைபெற்றிருந்தார்.

திலகவதியார் திருவதிகைவீரட்டானம் என்னுந் தலத்திலே தாம் நியமமாகத் தொண்டுசெய்து வழிபட்டுவருகிற திருக்கோயிலில் எழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானைத் தமது தம்பியாரை அடிமைக்கொள்ளும்படி பலநாளும் பிரார்த்தித்துவந்தார். ஒருநாட் கடவுள் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றிப் "பெண்ணே! கவலைப்படாதே. உன் தம்பி துறவியாய் நம்மையடையும் பொருட்டு முற்பிறப்பிலே தவஞ்செய்தவன். அத்தவத்திற் சிறிது வழுவியதினாற் புறமதத்திற் புகுந்தான். இனி அவனைச் சூலைநோயால் வருத்தி ஆட்கொள்வேம்" என்று சொல்லி மறைந்தருளினார்.

பின்பு மருணீக்கியாருக்குச் சூலைநோயுண்டாகி மிக வருத்தச் சமணர்கள் கூடி மயிற்பீலி கொண்டு தடவி மந்திரங்களை உச்சரித்துப் பார்த்தவிடத்தும் நோய்மாறாது முன்னினு மதிகப்படச் சமணர்கள் மனங்

கலங்கிக் கைவிட்டார்கள். இவர் தமக்கையாருக்கு இரகசியமாக ஆளனுப்பி அறிவித்து அவர் சொற்படி சமணர்பள்ளியை நீங்கி அவருடைய இடத்தை யடைந்து அவரை வணங்கினூர். அவர் இவருக்கு விபூதி கொடுத்துத் திருக்கோயிலிற் கொண்டுபோய் விட, இவர் பிரதக்ஷிணஞ்செய்து சந்நிதானத்திலே நமஸ்கரித்துச் சிவபெருமானுடைய திருவருளினாலே "கூற்றாயினவாறு" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி உடனே சூலைநோய் நீங்கப்பெற்றார். அப்பொழுது "அன்பனே! நீ அற்புத சின்மய மதுரமாகிய தேவாரத் திருப்பதிகத்தைப் பாடினமையால் உனக்கு நாவுக்கரசு என்னும் பெயர் வழங்குக" என்று ஒரு திருவாக்கு ஆகாசத்திலே தோன்றியது. அதுகேட்டு எல்லாரும் மகிழ்ந்தார்கள்.

இதனையறிந்த சமணர்கள் தம்முள்ளே சூழ்ந்து தம்மரசனையடைந்து, "மருணீக்கியார் தமக்குச் சூலைநோயென்று பொய் சொல்லி நம்மதத்தைவிட்டுச் சைவராயினர்" என்று தம்மரசனிடத்தேயறிவித்து அவனைக்கொண்டு பிடிப்பித்துப் பலதீங்குகள் செய்தவிடத்தும் இவர் திருவருளினாலே அவற்றினின்று தப்பிக்கொண்டு பல தலங்களினும் சென்று வழிபட்டுப் பதிகம் பாடுதலும் உழைவாரப்பணிவிடை செய்தலும் உடையாராய், திருஞானசம்பந்தசுவாமியைச் சந்தித்து அவரோடு பெருநட்புடையாராகி வாழ்ந்து எண்பத்தோராம் வயதிலே சிவசாயுச்சியத்தை அடைந்தார்.

இவரிடத்தில் விளங்கிய அற்புதங்களாவன:—

(க.) சமணர்களாலே ஏழுநாட் சுண்ணும்பறையிலே பூட்டப்பட்டிருந்தும் வேவாது பிழைத்தது.

(உ.) சமணர்கள் கொடுத்த நஞ்சுகலந்த பாற்சோற்றை உண்டுஞ் சாவாது பிழைத்தது.

(ங.) சமணர்கள் விடுத்த யானையால் வலஞ்செய்து வணங்கப்பட்டது.

(ச.) சமணர்கள் கல்லோடு கட்டிச் சமுத்திரத்து விட அக்கல்லே தோணியாகக் கரைசேர்ந்தது.

(ரு.) சிவபெருமானிடத்துப் படிக்காசுபெற்றது.

(சா.) வேதாரணியத்திலே வேதங்களாலே பூட்டப்பட்ட திருக்கதவு திறக்கப்பாடியது.

(எ.) விஷத்தினுலிறந்த பிராமணப்பிள்ளையை உயிர்ப்பித்தது.

(அ.) காசிக்கு அப்பால் ஒருதடாகத்து முழுகித் திருவையாற்றிலே ஒருவாவியிற் றோன்றிக் கரைசேர்ந்தது.

**பரீக்ஷைவினு.** திருநாவுக்கரசுநாயனுரது சரித்திரத்தையும் அவரிடத்து விளங்கிய அற்புதங்களையுஞ் சொல்லு.

---

## சஉ. சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

இச்சை - விருப்பம். படியோலை - பிரதியோலை.
மணம் - விவாகம். சேமம் - காவல்.
சிவாஞ்ஞை - - - சிவபெருமானது கட்டளை.

திருக்கைலாசமலையிலே வாழுகின்ற அடியார் கூட்டத்துள் ஒருவராகிய ஆலாலசுந்தரர் ஒருநாள் திருநந்தனவனத்திற் சென்று பூக்கள் கொய்யும் பொழுது அங்கே பூக்கொய்துகொண்டு நின்ற அநிந்திதை கமலினி என்னும் பெண்களைக் கண்டு இச்சைவைத்தனர். அவர்களும் இவர்மேல் இச்சைவைத்தனர். பின்பு ஒருபடி மனத்தைத் திருப்பிக்கொண்டு, இவர் சிவசந்நிதானத்துக்கும் அவர்கள் பார்வதி சந்நிதானத்துக்கும் திரும்பிவிட்டார்கள். அப்பொழுது சிவபெருமான் சிவபுண்ணியஞ் செய்யும்போது மனம் வேறுபட்ட குற்றத்துக்காகப் பூமியிலே பிறந்து அப்பெண்களோடு கூடி வாழும்படி கட்டளை செய்தருளினர்.

ஆலாலசுந்தரர் திருமுனைப்பாடிநாட்டிலே திருநாவலூரிலே சடையனர் என்னுஞ் சிவப்பிராமணருக்குப் புத்திரராய்ப்பிறந்து நம்பியாரூரர் எனப் பெயர் பெற்று இருந்தார். அநிந்திதை ஞாயிறூரிலே ஞாயிறுகிழவர் என்னும் வேளாளருக்குப் புத்திரியாய்ப் பிறந்து, சங்கிலியார் எனப் பெயர்பெற்றுப் பெதும்பைப் பருவத்திலே தாய்தந்தையர்கள் தமக்கு மணம்பேசத் தொடங்குதலை யறிந்து மறுத்துவிட்டுத் திருவொற்றியூரை

அடைந்து திருக்கோயிலுக்குச்சமீபத்திலே ஒருமாடத்திலிருந்துகொண்டு நியமமாகச் சுவாமிதரிசனமும் பூத்தொண்டுஞ் செய்துகொண்டிருந்தார். கமலினி திருவாரூரிலே உருத்திரகணிகையர் குலத்திலேபிறந்து பரவையார் எனப் பெயர்பெற்று வாழ்ந்தார்.

நம்பியாரூராகிய சுந்தரமூர்த்திசுவாமி தமது சுற்றத்தாருள்ளே ஒருவருடைய புத்திரியை விவாகஞ்செய்யுமாறு நியமிக்கப்பட்டு மணவாளக் கோலங்கொண்டுபோய்ப் பெண்வீட்டையடைந்த அப்பொழுதே சிவபெருமான் ஒரு கிழப்பிராமணவடிவங்கொண்டு அவ்விடத்தைச்சேர்ந்து "நம்பியாரூரா! உன் பாட்டன் எழுதித்தந்த அடிமையோலை இது. உன்னை விவாகஞ்செய்ய விடேன். எனக்கு அடிமைசெய்யவா" என்றார். சுந்தரமூர்த்தி சுவாமி "பிராமணருக்குப் பிராமணர் அடிமையாதல் உண்டா? நீ பித்தனா?" என்று சொல்லி அவர் கையிலிருந்த ஓலையைப்பறித்துக்கிழித்தார். அவர் "இது முறையோ" என்று சத்தமிட்டார். அங்கு நின்றவர்கள் "ஐயரே உம்முடைய இடம் எது?" என்று கேட்க அவர் திருவெண்ணெய்நல்லூர் என்றார். "நல்லது அங்கேதானேபோய் இவ்வழக்கைத் தீர்ப்பேம்" என்று எல்லாருங் கூடிப்போனார்கள். அங்கே சபையாராகிய பிராமணர் அவ்வழக்கை விசாரித்தபோது அக்கிழவர் "இவன் கிழித்தவோலை மூலவோலையைப்பார்த்து எழுதிய படியோலை. மூலவோலை சேமமாய் வைத்திருக்கி

றேன்" என்று எடுத்துக் கொடுத்தார். அவர்கள் அவ்வோலை யெழுதியவருடைய கையெழுத்தும் சாட்சிகளுடைய கையெழுத்துக்களும் சரியாயிருத்தலை ஆராய்ந்து துணிந்துகொண்டு "நீர் அவருக்கு அடிமைசெய்தலை வேண்டும்" என்று தீர்ப்புப்பண்ணிவிட்டு "ஐயரே! இவ்வோலையிலே இவ்வூரே உம்மூராகக் காணப்படுகின்றது. இங்கே உமக்குள்ள வீட்டைக் காட்டும்" என்றார்கள். அவர் "நீங்கள் ஒருவருமறியீராயிற் காட்டுகிறேன்" என்று சொல்லி அங்குள்ள திருக்கோயிலினுள்ளே மறைந்தருளினர்.

பின்பு சுந்தரமூர்த்திசுவாமிக்குக் கடவுள் வெளிப்பட்டு அருள்செய்து "நீ நம்மைப்பித்தனென்று முன் சொன்னாய். ஆகையால் என்பெயர் பித்தன் என்றே பாடு" என்றார். அவர் "பித்தாபிறை" என்னும் திருப்பதிகத்தைப் பாடினர். கடவுள் "இன்னும் பலவகையாகப்பாடு" என்று சொல்லி மறைந்தருளினர்.

பின்பு இவர் பல தலங்களிலுஞ் சென்று பதிகங்கள் பாடிப் பரவையாரையுஞ் சங்கிலியாரையுந் தனித்தனி சந்தித்து அவர்களோடு கூடிவாழ்ந்து பதினெட்டாம் வயதிலே சிவாஞ்ஞையினல் தேவர்களாற் கொண்டுவரப்பட்ட வெள்ளையானையின்மேலேறித் திருக்கைலாசமலையையடைந்தார்.

இவரிடத்தில் விளங்கிய அற்புதங்களாவன:—

(க.) செங்கற்கள் பொன்னாகப் பெற்றுக்கொண்டது.

(உ.) சிவபெருமான் கொடுத்த பன்னீராயிரம் பொன்னை விருத்தாசலத்திலுள்ள ஆற்றிற் போட்டுத் திருவாரூர்க்குளத்தி லெடுத்தது.

(ங.) காவேரியாறு பிரிந்து வழிவிடச் செய்தது.

(ச.) முதலைவிழுங்கிய பிராமணப்பிள்ளையை அம்முதலைவாயினின்றும் அழைத்துக் கொடுத்தது.

(ரு.) வெள்ளையானையிலேறித் திருக்கைலாசத்துக்குப் போனது.

**பரீக்ஷைவினா.** சுந்தரமூர்த்திசுவாமிகளது சரித்திரத்தையும் அவரிடத்து விளங்கிய அற்புதங்களையுஞ் சொல்லு.

---

## சங. மாணிக்கவாசக சுவாமிகள்.

தருக்கம் - வாதம். சற்குரு - நல்லாசிரியன்.
சுவாதீனம்-தன்னிச்சையானநடை. பிரபஞ்சவைராக்கியம் - உலகவாழ்வின் வெறுப்பு.
குதர்க்கம்—நீதியீனமானவாதம்.

இவர் திருவாதவூரிலே அமாத்தியப் பிராமண குலத்திலே திருவவதாரஞ்செய்து திருவாதவூரரென்னும் பெயருடையராய் வளர்ந்து, கல்வியறிவிற் சிறந்து விளங்கி, மதுரையிற் பாண்டியராசனாலே முதன் மந்திரியாராக வைத்துக்கொள்ளப்பட்டவர். மந்திரியுத்தி

யோகத்தை நடத்துநாளிலே சிவபத்தியும் பிரபஞ்ச வைராக்கியமு முடையராய்ச் சிவஞானத்தை இனிது போதிக்கவல்ல சற்குருவைத் தேடும் பேராசை யுடையராயிருந்தவர். அரசன் குதிரைவாங்கிவரும்படி அனுப்பத் திருப்பெருந்துறையையடைந்து, அங்கே தம்மை ஆட்கொள்ளும்படி மாநுடச்சட்டைசாத்திக் குருமூர்த்தமாய் எழுந்தருளிவந்திருந்த சிவபெருமானைத் தரிசித்து, அவரிடத்தே ஞானோபதேசமும் மாணிக்கவாசகரென்னும் திருப்பெயரும் பெற்றுக் குதிரைவாங்குதற் பொருட்டுக் கொண்டுபோன பொருளையெல்லாம் அவரடியார்க்குக் கொடுத்துவிட்டிருந்தவர்.

பின்பு அரசன் வலிந்து அழைப்பித்துத் தண்டஞ் செய்தல் கண்டு, சிவபெருமானே தம்மடியாரோடு நரிகளைப் பரிகளாக்கிக் கொணர்ந்து கொடுக்கக் கண்ட அரசனாலே புகழ்ந்துகொள்ளப்பட்டவர். அன்றிரவே அப்பரிகளெல்லாம் நரிகளாய் ஓடிவிடுதலும் அரசன் மீண்டுந் தண்டிக்கச் சிவாஞ்ஞையினாலே கங்கையானது வைகையாறாகி வந்து பெருகி மதுரையை அழிக்கத் தலைப்படுதலைக் கண்ட அரசனால் விடப்பட்டுத் தாமே அவ்வாற்றுக்கரையைக் குடிசனங்களைக்கொண்டு அடைப்பிக்கும்படி ஏற்படுத்தப்பட்டவர்.

அப்பொழுது அங்குள்ள சிவபத்தியிற் சிறந்த பிட்டுவாணிச்சி தன்பங்கை அடைப்பிக்க ஆட்கிடையாது வருந்தியபொழுது சிவபெருமான் தாமே கூலி

யாளாய்வந்து கரையடைக்கிறேனென்று பிட்டுவாங்கிப் புசித்துக்கொண்டு பல திருவிளையாட்டுக்களைச் செய்து அரசனாலே யடிக்கப்பட்டு அவ்வடி எங்கும் எல்லார்மே லும் படத் தாம் மறைந்துவிடுதலும் உடனே அரசனா லே வணங்கிப் பொறுதிகேட்கப்பெற்றுச் சுவாதீன மாய் ஒழுகும்படி விடப்பட்டவர். பின்பு சிவாஞ்ஞைப் படி தலயாத்திரை செய்து திருவாசகம் பாடிச் சிதம்ப ரத்தை யடைந்து சிலநாள் வாழ்ந்து முப்பத்திரண்டாம் வயதில் முத்தியையடைந்தவர்.

இவரிடத்தில் விளங்கிய அற்புதங்களாவன:—

(க.) இலங்கையிலிருந்து தம்மதத்தை நாட்ட முய ன்று சிதம்பரத்திற் சேர்ந்த புத்தர்களைத் தருக்கத்தில் வென்று அவர்கள் ஆற்றாதவர் களாய்க் குதர்க்கங்கள் பேசியது கண்டு பேசுஞ் சத்தியில்லாத ஊமைகளாகச் செய் தது.

(உ.) பின்பு அவர்களை ஊமைதீர்த்துச் சைவர்களாக் கினது.

(ங.) பிறவிதொடுத்து ஊமையாயிருந்த ஒரு பெண் ணை ஊமைதீர்த்துப் புத்தர்கள் வினாவியவினா க்களுக்கு விடைசொல்லும்படி செய்தது.

(ச.) சிதம்பரத்திலிருக்கும்பொழுது சிவபெருமான் பிராமணவடிவாய்வந்துகேட்டெழுதத் தாம்

பாடிய திருவாசக முழுதையுஞ் சொல்லிப் பின்னும் அவர் சொற்படி திருக்கோவை யாரையும் உடனே பாடி அவர்தாமே எழு தப் பெற்றுக்கொண்டது.

(ரு.) அவ்விரண்டும் எழுதிய திருமுறையைக் கடவுள் பஞ்சாக்ஷரப்படியிலே வைத்துவிட, அது கண்டெடுத்த தில்லைவாழந்தணர் முதலி யோர் வணங்கித் துதித்து அவற்றின்பொ ருளைத் தமக்கு விரித்துரைக்குமாறு வேண்டி க்கொள்ள, அவரோடு கனகசபையை யடை ந்து நடேசப்பெருமானைச் சுட்டி இவரே இவற்றின் பொருளென்று சொல்லி விட்டு, எல்லாருங்காணக் கனகசபையினுள்ளே செ ன்று மறைந்து சிவத்தோடுகலந்தது.

**பரீக்ஷவினா.** மாணிக்கவாசக சுவாமிகளது சரித்திரத் தையும் அவரிடத்தில் விளங்கிய அற்புதங்களையுஞ் சொல்லு.

---

## சச. அருள்.

அணுகாது - கிட்டாது.
இதம் - நன்மை, இனிமை.
தெள்ளிதில் - - -
வாய்மை - உண்மை.
தொடர்பு - சம்பந்தம்.
இலகுவில், நன்றாக.

அருளாவது இவை தொடர்புடையவை என்றும் இவை தொடர்பில்லாதவை என்றும் நோக்காது இயல் பாகவே எல்லாவுயிர்கண்மேலுஞ் செல்வதாகிய கருணை. அருளெனினும், கருணையெனினும், இரக்கமெனினும்

பொருந்தும். உலகவின்பத்துக்குக் காரணம் பொருளே யாதல்போலத் தருமத்துக்குக் காரணம் அருளேயாம். அருளென்னும் குணம் யாவரிடத்திருக்குமோ, அவரிடத்தே பழி பாவங்களெல்லாம் சிறிதும் அணுகாது நீங்கிவிடும். வாய்மையாகிய தகழியிலே பொறுமையாகிய திரியை இட்டு, தவமாகிய நெய்யை நிறையப் பெய்து, அருளாகிய விளக்கை ஏற்றினல், அஞ்ஞானமாகிய பேரிருள் ஓட்டெடுப்ப, பதியாகிய மெய்ப்பொருள் வெளிப்படும். மாணபரியந்தம் தன்னுயிரை வருந்திப் பாதுகாத்தல்போலப் பிறவுயிர்களையும் வருந்திப் பாதுகாப்பவன் யாவன், அவனே உயிர்களுக்கெல்லாம் இதஞ்செய்பவனுகி, தான் எந்நாளும் இன்பமே வடிவமாக இருப்பன்.

உயிர்களெல்லாம் கடவுளுக்குத் திருமேனிகள், அவ்வுயிர்களுக்கு நிலைக்களமாகிய உடம்புகளெல்லாம் கடவுளுக்கு ஆலயங்கள். ஆதலால், கடவுளிடத்து மெய்யன்புடையவர்கள் அக்கடவுளோடு உயிர்களுக்கு உளதாகிய தொடர்புபற்றி அவ்வுயிர்களிடத்தும் அன்புடையவர்களே யாவர்கள். உயிர்களிடத்து அன்பில்லாதபொழுது கடவுளிடத்து அன்புடையவர்போல் ஒழுகுதல் நாடகமாத்திரையேயன்றி உண்மையன்றென்பது தெள்ளிதிற்றுணியப்படும். பிறவுயிர்களிடத்து இரக்கமில்லாதவர் தம்முயிருக்கு உறுதிசெய்துகொள்ளமாட்டார்: ஆதலால், அவர் பிறவுயிர்களிடத்து மாத்திரமா தம்முயிரிடத்தும் இரக்கமில்லாதவரேயாவர். அவர் தமக்குத் தாமே வஞ்சகர்.

பரீக்ஷைவினா. அருளாவது என்ன? உலக இன்பத்துக்குக் காரணம் என்ன? தருமத்துக்குக் காரணம் என்ன? உயிர்களுக்கெல்லாம் இதம் செய்பவர் யாவர்? தம்முயிரிடத்தும் இரக்கம் இல்லாதவர் யாவர்?

---

## சரு. புலாலுண்ணல்.

காரணம் - ஏது. முளை - ஆப்பு.
காரியம் - ஆக்கப்பட்டது. ஈர்வாள் - மரமரியும்வாள்.
அருள் - கிருபை. அதிதி - வழிப்போக்கனாய்ப் பசித்து
பானீயம் - பருகுவன. [வந்த பரதேசி.

புலாலுண்ணலாவது உயிரின் நீங்கிய ஊனைப் புசித்தல். புலால் கொலையினாலே கிடைத்தலால், புலாலுண்ணல் கொலைப்பாவத்தின் காரியமாகும். புலாலுண்டவன் பின்னும் கொலைவாயிலாகப் புலாலை விரும்புதலால், புலாலுண்ணல் கொலைப்பாவத்துக்குக் காரணமுமாகும். இப்படியே எல்லாவிதத்தாலும் புலாலுண்ணல் கொலையோடு தொடர்புடையதாதலால், புலாலுண்பவர் உயிர்களிடத்து அருளில்லாதவரே. ஆதலால் புலாலைப் புசித்துக்கொண்டு உயிர்களிடத்து அருளுடையோம் என்பது நடிப்புமாத்திரமாமன்றி உண்மையாகாது. உலகத்திலே புலாலுண்பவர் இல்லையாயின், புலாலை விற்றற்பொருட்டு உயிர்க்கொலை செய்பவரும் இல்லை. ஆதலாற் கொலைப்பாவத்தைப் பார்க்கினும் புலாலுண்ணலே பெருங்கொடும்பாவம்.

தம்மினும் உயர்ந்த சாதியார் தாழ்ந்த சாதியாரிடத்தே சலபானம் பண்ணினும், அவருந் தாழ்ந்த சாதியார் என்று அவர்வீட்டிலே சலபானமும் பண்ணுத மனிதர்கள், புலையர்களுடைய மலத்தையும் புசிக்கின்ற பன்றி கோழி முதலியவைகளைப் புசிக்கின்றார்களே: அவர்கள் புலையரினும் தாழ்வாகிய புலையராவார்களன்றி உயர்ந்த சாதியாராகார்கள். அயல்வீட்டிலே பிணங்கிடந்தாலும் போசனஞ் செய்தற்கு மனம் பொருந்தாத மனிதர்கள் மிருகம் பக்ஷி முதலியவைகளுடைய பிணத்தைக் கலத்திலே படைத்துக்கொண்டு புசிக்கின்றார்களே! அன்னம் பானீயம் முதலியவைகளிலே மயிர் ஈ எறும்பு முதலியவைகளுள் ஒன்று விழுந்திருப்பக் கண்டாலும், மிக அருவருத்து உண்டசோற்றையும் கக்கும் மனிதர்கள் மற்ச மாமிசங்களைப் புசிக்கின்றார்களே! ஊறுகாய் முதலியவைகளிலே ஒரு புழுவைக் கண்டால் அருவருத்துச் சரீரங்குலைந்து அவைகளை எடுத்தெறிந்துவிடும் மனிதர்கள் புழுத்த மாமிசங்களை விரும்பிப் புசிக்கின்றார்களே! தங்களெதிரே ஆடுகள் சிந்தத்தெறித்த கோழை தங்களுடம்பிலே படுதலும், பொறுது மனங்குலையும் மனிதர்கள் அவ்வாடுகளின் மாமிசத்தை மூளையோடு மனமகிழ்ந்து புசிக்கின்றார்களே! பூமியில் உள்ள சுடுகாடுகள் மனிதர்களுடைய பிணத்துக்குச் சுடுகாடுகளாயிருக்கும்: மிருகங்களுக்கும் பக்ஷிகளுக்கும் மற்சங்களுக்கும் சுடுகாடுகள் சீவகருணையில்லாத மனிதர்களுடைய வயிறுகளேயாம்.

கொலைசெய்தவரும், புலாலை விற்றவரும், புலாலை விலைக்கு வாங்கினவரும், புலாலைப் புசித்தவரும், புலால் புசியாதவரைப் புசிப்பித்தவரும், சிலர் சொல்லுக்கு அஞ்சிப் புலாலைப் புசித்தவருமாகிய எல்லாரும் பாவிகளேயாவர். அப்பாவிகளை நரகத்திலே இயமதூதர்கள் அக்கினி சுவாலிக்கும் முள்ளிலவமரத்திலே குப்புறப் போட்டு, இருப்புமுளைகளை நெருங்கக் கடாவிய தண்டத்தினாலே முதுகில் அடிப்பார்கள்; அதுவன்றிக் குடாரியினாலே கொத்தி, ஈர்வாளினால் அறுப்பார்கள்; இரும்பு முதலிய உலோகங்களை உருக்கி, அவர்கள்வாயிலே வார்ப்பார்கள். புலாலுண்ணாமையினாலே தங்கள் உடம்பு மெலிகின்றது என்று உண்ணப்புகும் மனிதர்கள், புலாலுண்டு தங்கள் உடம்பைப் பருக்கச்செய்து நரகத்திலே நெடுங்காலம் துன்பம் அனுபவித்தல் நல்லதோ, புலாலுண்ணாமல் தங்களுடம்பை வாட்டி நித்தியமாகிய முத்தியின்பத்தைப் பெற்று வாழுதல் நல்லதோ, இதனைச் சிந்திக்கக்கடவர்கள்.

மேற்கூறிய பாவிகள் எண்ணில்லாத காலம் நரகத் துன்பத்தை அனுபவித்து, பின்பு பூமியிலே பன்றிமுதலிய இழிந்த பிறப்புக்களாய்ப் பிறந்திறந்து உழன்று, மனிதப்பிறப்பை எடுத்து, பெருவியாதி, கருங்குட்டம், வெண்குட்டம், நீரிழிவு, கண்டமாலை முதலிய வியாதிகளினாலே வருந்துவர்கள்.

கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களெல்லாவற்றினும் ஸ்நானஞ்செய்தானாயினும், கடவுளைப் பூசித்தா

ணுயினும், எண்ணில்கோடி தானஞ்செய்தாணுயினும், ஞானசாத்திரங்களை ஓதியுணர்ந்தாணுயினும், புலாலைத் தள்ளாது புசித்தவன் நரகத்தை அடைவன்.

அசரமாகிய மரமுதலியவைகளைக் கொன்று புசித்தல் பாவமாயினும், அவைகள் எழுவகைத் தோற்றத்துள்ளும் தாழ்ந்த பருவத்தை உடையவையாதலால், அக்கொலையாலாகும் பாவம் சிறிதாகும். அசரபதார்த்தங்களை நாடோறும் கடவுள் அக்கினி குரு அதிதிகள் என்னு நால்வகையோருக்கும் முன்னூட்டிப் பின்னுண் பாணுயின், அவ்வசரக்கொலையால் வரும் பாவமும், உழுதல், அலகிடல், மெழுகுதல், நெருப்பு மூட்டல், தண்ணீர் கவர்தல், நெற்குத்துதல் முதலிய தொழில்களால் வரும் பாவமும், அவ்வக்காலத்திலே நீங்கிவிடும்.

**பரீக்ஷவினு.** புலாலுண்ணலாவது என்ன? புலாலுண்ணல் எதனுல் கொலைப்பாவத்தின் காரியமாகிறது? புலாலுண்ணல் எதனுல் கொலைப்பாவத்துக்குக் காரணமாகின்றது? புலாலுண்பவர் எதனுல் உயிர்களிடத்து அருளில்லாதவராகிருர்? புலாலுண்ணல் எதனுல் கொலைப்பாவத்தைப்பார்க்கினும் கொடும்பாவமாகின்றது? ஆரார் பாவிகளென்று சொல்லப்படுவார்கள்? அப்பாவிகளுக்கு நரகத்தில் எவ்வித தண்டனை கிடைக்கும்? புலால்புசித்தவனுக்கு எதனுல் மோக்ஷம் கிடைக்கமாட்டாது. அசர உணவைப்பற்றி என்னசொல்லப்பட்டிருக்கிறது.

---

## சகூ. களவு.

கடிதல் - தண்டித்தல். பாசம் - கயிறு.

களவாவது பிறருடைமையாய் இருக்கும் பொருளை அவரை வஞ்சித்துக் கொள்ளுதல். களவினுல் வரும் பொருள் வளர்வதுபோலத் தோன்றி, தான் போம்பொழுது பாவத்தையும் பழியையுமே நிறுத்தி விட்டு, முன்னுள்ள பொருளையும் தருமத்தையும் உடன் கொண்டு போய்விடும். களவு செய்பவர், அப்பொழுது "யாவராயினும் காண்பாரோ அடிப்பாரோ கைகால்களைக் குறைப்பாரோ" என்றும், பின்பும் "இராசா அறிந்து தண்டிப்பானே" என்றும், பயந்து பயந்து மனந் திடுக்குறுதலினுல், எந்நாளும் மனத்துயரமே உடையவராவர். அறியாமையினுலே களவு அப்பொழுது இனிதுபோலத் தோன்றினும், பின்பு தொலையாத துயரத்தையே கொடுக்கும்.

களவுசெய்தவர் இம்மையிலே அரசனுலே தண்டிக்கப்பட்டு எல்லாராலும் இகழப்படுவர். அவரை அவர் பகைவர்மாத்திரமா உறவினரும் சிறிதாயினும் நம்பாது அவமதிப்பர். களவினுலாகிய இகழ்ச்சியைப் பார்க்கினும் மிக்க இகழ்ச்சி பிறிதில்லை. ஒருகாற் களவு செய்தவரென்று அறியப்பட்டவர் சென்ற சென்ற இடங்களினெல்லாம், பிறராலே செய்யப்பட்ட களவும் அவராற் செய்யப்பட்டதாகவே நினைக்கப்படும்.

களவென்னும் பெருங்குற்றத்தைச் சிறுபருவத்திற்றானே கடிதல்வேண்டும். கடியாதொழிந்தால், அது மேன்மேலும் வளர்ந்து பெருந்துன்பக்கடலில் வீழ்த்திவிடும். ஆதலாற் சிறுவர்களிடத்தே அற்பக் களவு காணப்படினும், உடனே தாய் தந்தையர்கள் அவர்களைத் தண்டித்துத் திருத்தல்வேண்டும். அப்படிச் செய்யாதுவிட்டால், அப்பிள்ளைகளுக்குப் பின்விளையும் பெருந்துன்பத்துக்குத் தாய்தந்தையர்களே காரணராவார்கள்.

களவு செய்தவரையும், களவுக்கு உபாயஞ் சொன்னவரையும், களவு செய்தவருக்கு இடங்கொடுத்தவரையும், நரகத்திலே இயமதூதர்கள், அவயவங்களெங்கும் இருப்புமுளைகளை அறைந்து, வருத்துவார்கள். பாசத்தினாலே அவயவங்களெல்லாவற்றையுங் கூட்டிக்கட்டி, அக்கினிநரகத்திலே குப்புறப் போடுவார்கள். அவர்கள் நெடுங்காலம் நரகத்துன்பம் அநுபவித்தபின்பு, பூமியிலே பிறந்து, குட்டம், காசம், வாதம், மூலரோகம் முதலிய நோய்களினால் வருந்துவார்கள்.

**பரீக்ஷைவினா.** களவாவது என்ன? களவு எதைக் கொடுக்கும்? எதற்காகக் களவு சிறுபருவத்திற் கடியப்படவேண்டும்? களவு செய்தவருக்கு என்ன தண்டனை கிடைக்கும்?

---

## சஎ. கற்பு. 1.

| | |
|---|---|
| யௌவனம் - வாலிபம். | வந்தித்தல் - வணங்கல். |
| சுவாதீனம் - தன்னிட்டம். | உச்சிட்டம் - எச்சில். |
| தலைக்கடை - வெளிவாயில் | பொதுப்பெண் - வேசி. |

பெண்களுக்குக் கற்பாவது விவாகஞ்செய்யு முன் பிதாமாதாக்களாலும் விவாகஞ்செய்தபின் கணவனாலும் கற்பிக்கப்பட்டபடியே நீதி வழுவாமல் ஒழுகுதலாம். பெண்கள் இளமைப்பருவத்திலே பிதாவினாலும், யௌவனத்திலே கணவனாலும், மூப்பிலே புத்திரனாலும் காக்கத்தக்கவர்; ஆகையால் ஒருபோதும் பெண்கள் சுவாதீனரல்லர். கணவனும் புதல்வனும் இல்லாத மனைவியை அவளுடைய கணவன்பக்ஷத்தார் காக்கக்கடவர்; அவர்கள் இல்லாதபோது அவளுடைய தாய்பக்ஷத்தார் காக்கக்கடவர். தகப்பன் கணவன் பிள்ளைகள் இவர்கள் இல்லாமல் தனித்திருக்க விரும்பும் பெண், பிறந்த குலம் புகுந்த குலம் இரண்டுக்கும், வசைவை உண்டாக்கிவிடுவள்.

பிதாமாதாக்கள், பெண்ணுக்குச் சிறுபிராயத்திலே கடவுளுடைய குணமகிமைகளையும், புண்ணிய பாவங்களையும், சுவர்க்க நரகபலங்களையும், கடவுளை வழிபடு முறைமையையும், கணவனுக்குத் தொண்டு செய்யும் முறைமையையும் கற்பித்து, வீட்டு வேலைகளைப் பழக்கல்வேண்டும். பெண்களுக்கு உரிய தருமங்களெல்லாவற்றுள்ளும் முக்கிய தருமம் பதிவிரதம். "குலமகட்கழகுதன் கொழுநனைப் பேணுதல்" என்றார் பெரியோர்.

சூரியோதயத்துக்கு முன்னே நித்திரைவிட்டெழுதல், கடவுளைத் தியானித்துத் துதித்தல், வீடு விளக்கஞ்செய்தல், பாத்திரசுத்திசெய்தல், தேவபூசைத்திரவியங்கள் அமைத்தல், மாமன் மாமியாரை வந்தித்தல்,

கணவனுடைய பணிவிடையைச் செய்தல் இவை முதலியனவெல்லாம் மங்கலவாழ்க்கையையும் செல்வத்தையும் விரும்பிய நன்மனைவியின் செய்கைகளாம்.

உரலிலேனும், உலக்கையிலேனும், அம்மியிலேனும், வாயிற்படியிலேனும், முறத்திலேனும் இருக்கலாகாது; இருந்தாற் சீதேவி நீங்குவள்.

நாடோறும் தன்னாயகன் உண்டபின் தானுண்ணுதலும், அவன் சயனித்தபின் தான் சயனித்தலும், அவன் நித்திரைவிட்டெழுவதற்கு முன்னே தான் நித்திரைவிட்டெழுதலும் பதிவிரதைக்கு உரியசெய்கைகளாம். கணவன் கொடுத்த பொருளை வீணாகச்செலவழியாமையும், அவனுடைய வரவுக்கேற்பச் செலவழித்தலும், அவனோடு ஒத்திருத்தலும், அவனாணைப்படி நடத்தலும், கடுஞ்சொலின்மையும், இன் சொற்சொல்லலும் அவள் செய்கைகளாம்.

பதிவிரதை தன்வீட்டுக்கு வரும் துறவிகள் முதலிய பெரியோர்களையும் அதிதிகளையும் உபசரித்து, அவர்களுக்கு அன்னங்கொடுத்தல்வேண்டும். குருடர், முடவர், வியாதியாளர், விருத்தர் முதலானவர்கள் வந்தால் முகமலர்ச்சியோடும் இயன்றமட்டும் பிக்ஷைகொடுத்து, இனிய வார்த்தைகளைச் சொல்லி அனுப்ப வேண்டும். யாவரோடாயினும் இடி இடித்ததுபோல உரத்தசத்தத்தோடு பேசலாகாது; இனிய குரலோடு மிருதுவாகப் பேசல்வேண்டும்.

நாயகனுடைய ஆயுள் பெருகும்பொருட்டு மஞ்சலணிதல்வேண்டும். தன்னாயகன் பெயரைச் சொல்லலாகாது. அவன் இருந்தாலன்றி அவனெதிரே தான் இருக்கலாகாது. அவனுடைய உச்சிட்டத்தை அமிர்தம்போலப் புசித்தல்வேண்டும். நாயகன் ஏவுமுன்னரே அவ்ன் குறிப்பறிந்து நடத்தல்வேண்டும். தன்னாயகன் வீட்டுக்கு வரும்பொழுது அவனை முகமலர்ச்சியோடு எதிர்கொண்டு கைகால்கழுவச் சலங்கொடுத்து உபசரித்தல்வேண்டும்.

தகாத வார்த்தைபேசல், தலைக்கடையிலே நிற்றல், பலகணிவழியாகப் பார்த்தல், சிரித்தல், பகலிலே நித்திரைசெய்தல், காரியஞ்செய்யாமை, ஆஞ்ஞையில்லாமல் வெளியே போதல், அயலாரோடு பேசுதல், பொதுப்பெண்கள்போலப் பார்த்தல், தம்மை அழகுபெற அலங்கரித்தல், கூத்து முதலியவைகளைப்பார்க்கவிரும்புதல், கணைக்காலும் தனமுந் தெரிய ஆடையுடுத்தல், முதிர்ந்த வயசுடையவர் இல்லாத வீட்டுக்குப் போதல், கூட்டத்தினுள்ளே புன்னகை செய்தல், வேசை தூர்த்தை கற்புநிலைகெட்டவள் மாயக்காரி இவர்களுடன் கூடுதல், கணவனை விட்டு அயலூருக்குப்போதல், கணவனைவிட்டுத் தீர்த்தயாத்திரை முதலானவை செய்தல், தான் விரும்பிய இடத்திலே தூங்குதல், அயல்வீட்டில் இருத்தல் இவையெல்லாம் ஒழுக்கங் கெடுதற்கு ஏதுவாம்.

**பரீக்ஷவினு.** கற்பாவது என்ன? பெண்களுக்குச் சிறுபிராயத்திற் கற்பிக்கப்படவேண்டியது யாது? நன்மனைவியின் செய்கைகள் எவை? பெண்களுடைய ஒழுக்கங் கெடுதற்கு எதுவான செயல்கள் எவை?

---

## ச௮. கற்பு. 11.

உபசரித்தல்-மரியாதைபண்ணல். துறந்திருத்தல்-நீங்கியிருத்தல்.
அவமதித்தல் - நிந்தித்தல். சங்கற்பம் - நியமம்.

மனைவியானவள், தனக்கு ஈசுரசங்கற்பத்தினால் வாய்த்தகணவன் அழகில்லாதவனாயினும், நற்குணமில்லாதவனாயினும், வியாதியாளனாயினும், வறியவனாயினும், கல்வியில்லாதவனாயினும், வயோதிகனாயினும், அவனைச் சிறிதும் அவமதியாது, நன்குமதித்து வழிபடல்வேண்டும். இயன்றமட்டும் தன் கணவனுக்குக் கோபம் பிறவாவண்ணம் நடக்க முயலல்வேண்டும். ஒருபோது கோபம்பிறந்தால் அதனைப் பொறுத்துக்கொண்டு, முகமலர்ச்சிகாட்டி, இன்சொற்களைச் சொல்லி, அதனைத் தணித்தல்வேண்டும். ஒருபோது கணவன் அநீதியாகக் கோபித்துக் கண்டித்தாலும், தானும் கோபித்து எதிர்வார்த்தைபேசாது, மௌனமாயிருந்து, இதமே பேசி, அக்கோபத்தை ஆற்றல்வேண்டும். "பெண்டிர்க்கழகெதிர் பேசாதிருத்தல்" என்று பெரியோர் விதித்திருக்கின்றார்.

மனைவியானவள் தன்கணவனுடைய குற்றங்களைப் பிறருக்குச் சொல்லலாகாது, "தூற்றும்பெண்டிர் கூற்

றெனத்தகும்" என்றார் ஔவையார். கணவனுடைய துர்க்குணங்களைச் சொப்பனத்திலும் நினைக்கலாகாது. அவனுடைய நற்குண நற்செய்கைகளையே பாராட்டி, அவனை மெய்யன்போடு உபசரித்தல்வேண்டும்.

மனைவியானவள் தன்னுடைய பிதாமாதாச் சகோதரர் முதலிய சுற்றத்தார்களெல்லாரிடத்தினும் பார்க்கத் தன்னாயகனிடத்தே மிக்க அன்புவைத்தொழுகல் வேண்டும். பதிவிரதையானவள் தான் தரித்த ஆபரணங்களெல்லாவற்றையும் துறந்திருந்தாலும், தன் மங்கலியத்தைமாத்திரம் ஓரிமைப்பொழுதாயினும் துறந்திருக்கமாட்டாள்; அதுபோலவே தன் பிதா மாதா முதலிய சுற்றத்தார்களெல்லாரையும் விட்டு நீங்கினாலும், தன்னாயகனைமாத்திரம் விட்டு நீங்காள். மனைவியுங் கணவனும் ஒருமைப்பட்டு மகிழ்ந்திருந்தால், குலமுழுதும் மகிழ்ச்சியடையும்; அதனாலே தருமம் பொருள் இன்பம் என்னும் மூன்று பயனும் உண்டாகும்; மனைவியானவள் தன்னாயகன் தன்வீட்டில் இருக்கும்பொழுதுமாத்திரமே தன்னை ஆபரணம் புஷ்பம் முதலியவைகளினாலே அலங்கரித்துக்கொள்ளல் வேண்டும்; தன்னை அவன் பிரிந்திருக்கும்பொழுது அலங்கரித்துக்கொள்ளலாகாது.

மனைவி கற்புநிலை தவறினவளானால், குலங்கெடும்; அதனால் எல்லாப்பயனுங் கெடும்; ஆகையால் முயற்சி கொண்டு மனையாளைத் தருமமுடையவளாய் இருக்கும்

படி காத்தல்வேண்டும். அவள் இரவினும் பகலினும் சற்றேனும் அயலாரோடு பேசாதிருக்கும்படி, மாமியார் முதலானவர்கள் அவளைக் காக்கக்கடவர்கள். பெண்கள் தங்களைத் தாங்களே காத்தல்வேண்டும், அதுவே அவர்களுக்கு நல்லகாவலாகும்.

விவேகமில்லாத சிலபெண்கள், செல்வர்வீட்டுப் பெண்கள் தரித்திருக்கின்ற ஆடை ஆபரணங்களைப் போலத் தங்களுக்கும் வாங்கித் தரும்பொருட்டுத் தங்கள் கணவர்களை வருத்துகின்றார்கள்; கடன்பட்டாயினும் வாங்கிக்கொடுத்தாலொழியத் திருப்தியடையார்கள்; வாங்கிக்கொடாதபொழுது அவர்களை அவமதிக்கின்றார்கள். விவேகமுள்ள பெண்கள் தங்கள் கணவர்கள் தங்கள் பொருள்வரவுக்கேற்ப வாங்கிக் கொடுப்பவைகளைப் பெற்றுக்கொண்டு, செய்ந்நன்றியறிந்தவர்களாய்த் திருப்தியடைவார்கள். தம்மினும் செல்வராயுள்ளவர்களைப் பார்த்துப் பெருமூச்செறிந்து வீண்வருத்தமடையாமல், தம்மினும் வறியவராயிருப்பவர்களைக் கண்டு, தமக்கு உள்ளதே மிக்கதென்று மனமகிழ்ச்சி அடைவார்கள்.

நன்மனையாள், வீட்டிலே தன் கணவன் யாதொரு தொழிலும் இல்லாதிருக்கும்பொழுது, கடவுளுடைய குணமகிமைகளை அறிவிக்கும் நூல்களைத் தனக்கு வாசித்து அவைகளின் பொருளை அறிவிக்கும்படி பிரார்த்திப்பாள். தன்கணவன் இடம்பநிமித்தம் செலவுசெய்ய

எண்ணினால், இனியவார்த்தைகளைச் சொல்லித் தடுத்து, வீணிலே செலவாகும் பணத்தைத் தருமத்திலே செல விடும்படி வேண்டிக்கொள்வாள். தன்கணவன் பிதாமா தாக்களையாயினும் சகோதரர்களையாயினும் சகோதரி களையாயினும் பகைக்காதபடிக்கும், அவர்களோடு எதிர் வார்த்தை பேசாதபடிக்கும், அவர்களை அன்போடு பாதுகாக்கும்படிக்கும், பணிந்து இனிய வார்த்தைகளி னாலே வேண்டிக்கொள்வாள். கெட்டமனையாளோ இப் படிச் செய்யாமல் எந்நாளும் குடும்பத்திலே கலகமே விளைப்பாள்.

தூரஸ்திரி முதனாள் சண்டாளிக்கும் இரண்டா நாள் பிரமக்கொலை செய்தவளுக்கும் மூன்றுநாள் வண் ணாத்திக்குஞ் சமமாவாள்; ஆதலினால் அவள் இந்த மூன்றுநாளும் யாதொருகருமத்துக்கும் உரியளல்லள். இராத்திரியில் வீட்டுக்கு விலக்கானால், அவ்விராத்தி ரியை மூன்றுபாகமாக்கி, முதலிரண்டுபாகத்தில் விலக் கானால், அந்தநாண்முதலாகக் கொள்ளல் வேண்டும்; மூன்றும்பாகத்தில் விலக்கானால் மற்ற நாண்முதலாகக் கொள்ளல்வேண்டும்.

வீட்டுக்கு விலக்காயுள்ள மூன்றுநாளும், சரீரசுத் திநிமித்தம் நதி முதலியவைகளைத் தீண்டாமல், வேறொ ருவரைத் தண்ணீர் தரச்சொல்லிச் சரீரசுத்திசெய்து, ஒருநேரம் பகற்பொழுதிலே போசனஞ் செய்துகொண் டிருத்தல்வேண்டும். இம்மூன்றுநாளும் இராத்திரியிற்

புசித்தலும், பகலிலே நித்திரைசெய்தலும், வீட்டுக்கு விலக்காயுள்ள மற்றப்பெண்களைத் தீண்டலும், தன்னாயகனெதிரே முகங்காட்டலும், அவனோடு பேசலும், நெற்குத்துதல் முதலிய தொழில்களும் ஆகாவாம்.

தூரஸ்திரி தொட்ட வெண்கலப் பாத்திரத்தையும் பித்தளைப் பாத்திரத்தையும் மூன்றுதரம் வெள்ளையிட்டு நெய்பூசிக் காய்ச்சிற் சுத்தியாம். அவள் படுத்த நிலம் கோமயத்தினாலே மெழுகிற் சுத்தியாம். அவள் இருந்த இடத்திலே இரண்டு விற்கிடைக்குள்ளே தொட்டாற் றீட்டாகும்; இரண்டு விற்கிடைக்குள்ளும் காஷ்டத்தினாலேனும் திருணத்தினாலேனும் மறைத்தால், அப்பாலுள்ள நிலத்திலே தீட்டில்லை.

தூரஸ்திரி நாலாநாள் மண்ணினாலே தந்தசுத்தி செய்து, சூரியோதயத்துக்குமேல் ஆறு நாழிகைசென்றபின், உடம்புமுழுதும் கோசலமும் புற்றுமண்ணும் பூசி, புடைவையை உவர்மண் முதலியவற்றினாலே சுத்திசெய்து, நதி முதலியவைகளிலே ஸ்நானம் பண்ணல் வேண்டும். ஸ்நானம்பண்ணியவுடனே தன்னாயகன் முகத்திலே விழித்தல்வேண்டும்; மற்றைப்புருஷர் முகத்திலே விழிக்கலாகாது. அப்போது நாயகன் இல்லையாயின், தன்னாயகனை மனசிலே சிந்தித்துச் சூரியனைத் தரிசித்தல்வேண்டும். இப்படிச் செய்துகொண்டு வீட்டிலே போய், பஞ்சகவ்வியமேனும் பாலேனும் நெய்யேனும் உட்கொண்டு, திரும்பவும் ஸ்நானஞ்செய்து, அன்று

முழுதும் பாத்திரங்களைத் தீண்டாமலும் பணி செய்யாமலும் இருத்தல் வேண்டும். ஐந்தாநாள் ஸ்நானஞ்செய்தபின்பு பணிக்கு உரியவளாவள்.

நாலாநாட் டொடங்கிப் பன்னிரண்டா நாள்வரையும் ருது உண்டானால், சலமோசனத்துக்குச் சுத்தி செய்வதுபோலச் சுத்திசெய்தல்வேண்டும்; அப்பாற் பதினெட்டாநாள்வரையும் ருது உண்டானால் ஸ்நானம் பண்ணல்வேண்டும்; அப்பால் ருது உண்டானால் மூன்று நாள் விலக்காயிருந்து, நாலாநாள் ஸ்நானஞ் செய்தல் வேண்டும்.

**பரீக்ஷைவினு.** இப்பாடத்தின் பொழிப்பைச் சொல்லு.

---

## சக. கற்பு. 111.

எண்ணில்லாத - அளவில்லாத. தாமிரம் - செம்பு.

**ம**னையாள், தன்கணவன் இறந்துவிட்டால், விதவைக்கு உரிய ஒழுக்கங்களை வழுவாமல் அநுட்டித்தல் வேண்டும். விதவை மயிருடனிருத்தலும், ஆபரணந் தரித்தலும், வெற்றிலைபாக்கு உண்ணலும் ஆகாவாம். வெள்ளைப்புடைவை தரித்தல் வேண்டும். ஒருபொழுது பகலிலே புசித்தல் வேண்டும் பாயல்வேண்டாது தரையிலே சயனித்தல் வேண்டும். ஐம்பொறிகளையும் அடக்கல் வேண்டும். அட்டமியிலும் சதுர்த்தசியிலும் பௌர்ணிமையிலும் உபவாசஞ் செய்தல் வேண்டும். செபம்,

தியானம், பூசை, திருக்கோயிலிலே திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், பூக்கள் கொய்து திருமாலைகள்தொடுத்தல் முதலிய பணிகளை நாடோறும் விதிப்படி செய்தல்வேண்டும். மிக முதிர்ந்த வயசையுடைய பெரியோர்களிடத்திலே அறிவுநூல்களைக் கேட்டல்வேண்டும்.

கற்புநிலை தவறிய பெண்கள் நரகத்திலே அக்கினிமயமாகிய இருப்புப்பாவையைத் தழுவி வருந்துவர்கள். இயம தூதர்கள் அவர்களை இருப்புக்குடத்தினுள்ளே புகுத்தி, அதன்வாயை அடைத்து, அக்கினிமேல் வைத்து எரிப்பார்கள்; அவர்கள் சரீரத்தை உரலில் இட்டு இடிப்பார்கள்; அக்கினிமயமாகிய சிலையிலே சிதறும்படி அறைவர்கள்; இருட்கிணற்றிலே விழுத்துவர்கள்; அங்கே இரத்தவெள்ளம் பெருகும்படி கிருமிகள் அவர்கள் உடம்பைக் குடையும்; பின்னும் அவர்கள் அக்கினிநரகத்தில் வீழ்த்தப்பட்டு "என்செய்தோம் என்செய்தோம்" என்று நினைந்து நினைந்து அழுங்குவர்கள்.

பரபுருஷரை இச்சித்துத் தீண்டின பெண்களை இயமதூதர்கள் அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளினாலே குத்துவர்கள்; அவர்களுடம்பிலே தாமிரத்தை உருக்கி வார்ப்பர்கள்; பரபுருஷரை இச்சித்துப் பார்த்த பெண்களுக்குக் கண்களிலே அக்கினியிற் காய்ச்சிய ஊசிகளினாலே குத்தி, முற்கூறிய மற்றைத் துன்பங்களையுஞ் செய்வர்கள்.

கணவன்சொற்படி நடவாதவள் நாயாயும் நரியாயும்பிறப்பள். கணவனை இகழ்ந்தவள் புலியாய்ப் பிறப்

பள். பரபுருஷனை இச்சித்தவள் பேய்வடிவ மடைவள். கணவன் பசித்திருக்கப் புசித்தவள் பன்றியாய்ப் பிறப்பள்.

கற்புநிலை தவறிய பெண்கள், பிறவிதோறும், பிரமேகம், கிரந்தி, சூலை, கிரகணி, குடல்வாதம், குட்டம் முதலிய எண்ணில்லாத வியாதிகளினாலும், வறுமையினாலும் வருந்துவர்கள்.

பரீக்ஷைவினா. இப்பாடத்தின் பொழிப்பைச் சொல்லு.

---

## ௩௦. நூல்களின் தொகையும் பெயரும்.

### வேதம் ௪.

| | |
|---|---|
| இருக்கு | சாமம் |
| யசுர் | அதர்வம். |

---

### வேதாங்கம் ௬.

| | | |
|---|---|---|
| சிக்ஷை | சந்தசு | சோதிடம் |
| வியாகரணம் | நிருத்தம் | கற்பம். |

---

### உபாங்கம் ௪.

| | |
|---|---|
| மீமாஞ்சை | புராணம் |
| நியாயம் | மிருதி. |

---

## மீமாஞ்சை உ.

பூருவமீமாஞ்சை　உத்தரமீமாஞ்சை.

## நியாயம் உ.

கௌதமசூத்திரம்　கணாதசூத்திரம்.

## புராணம் கஅ.

| | |
|---|---|
| பிரமபுராணம் | பிரமகைவர்த்தபுராணம் |
| பதுமபுராணம் | இலிங்கபுராணம் |
| வைணவபுராணம் | வராகபுராணம் |
| சைவபுராணம் | காந்தபுராணம் |
| பாகவதபுராணம் | வாமனபுராணம் |
| பவுடியபுராணம் | கூர்மபுராணம் |
| நாரதியபுராணம் | மற்சபுராணம் |
| மார்க்கண்டேயபுராணம் | காருடபுராணம் |
| ஆக்கினேயபுராணம் | பிரமாண்டபுராணம். |

## மிருதி கஅ.

| | |
|---|---|
| மனுஸ்மிருதி | கௌதமஸ்மிருதி |
| பிரகஸ்பதிஸ்மிருதி | அங்கிரஸ்மிருதி |
| தக்ஷஸ்மிருதி | யாஞ்ஞவல்கியஸ்மிருதி |
| யமஸ்மிருதி | பிரசேதஸ்மிருதி |

சாதாதபஸ்மிருதி
லிகிதஸ்மிருதி
பாராசரஸ்மிருதி
அத்திரிஸ்மிருதி
சம்வர்த்தஸ்மிருதி
விஷ்ணுஸ்மிருதி
உசனஸ்மிருதி
ஆபத்தம்பஸ்மிருதி
சங்கஸ்மிருதி
ஹாரிதஸ்மிருதி.

---

## இதிகாசம் ௩.

சிவரகசியம்
இராமாயணம்
பாரதம்.

---

## சைவாகமம் உஅ.

காமிகம்
யோகஜம்
சிந்தியம்
காரணம்
அசிதம்
தீப்தம்
சூக்குமம்
சகச்சிரம்
அஞ்சுமான்
சுப்பிரபேதம்
விசயம்
நிச்சுவாசம்
சுவாயம்புவம்
ஆக்கினேயம்
வீரம்
ரௌரவம்
மகுடம்
விமலம்
சந்திரஞானம்
முகவிம்பம்
புரோற்கீதம்
லளிதம்
சித்தம்
சந்தானம்
சர்வோக்தம்
பாரமேசுரம்
கிரணம்
வாதுளம்.

---

## வைஷ்ணவாகமம் உ.

பாஞ்சராத்திரம் வைகானசம்.

---

**பரீக்ஷைவினா.** வேதமுதலியவற்றின் தொகைகளையும் பெயர்களையும் சொல்லுக.

## நான்காம்பாலபாடம்

முற்றுப்பெற்றது.

---

## குறியீடு.

| | | | |
|---|---|---|---|
| உறுப்பிசைக்குறி | , | வினாவிசைக்குறி | ? |
| தொடரிசைக்குறி | ; | மெய்ப்பாட்டிசைக்குறி | ! |
| விளக்கிசைக்குறி | : | இயைபிலிசைக்குறி | () |
| முடிப்பிசைக்குறி | . | அநுவாதக்குறி | "—" |

, இக்குறியுள்ளவிடத்தே ஒருமாத்திரைநிறுத்து.

; இக்குறியுள்ளவிடத்தே இரண்டுமாத்திரைநிறுத்து.

: இக்குறியுள்ளவிடத்தே மூன்றுமாத்திரைநிறுத்து.

. இக்குறியுள்ளவிடத்தே நான்குமாத்திரைநிறுத்து.

---

